# சுதேசவாசகம்

மூன்றும் புத்தகம்





# சுதேச வாசகம்

## மூன்றும் புத்தகம்

[1957ஆம் ஆண்டில் வெளிவந்துள்ள, இணைக்கப்பெற்ற ஆரம்பக்கல்விப் பாடத் திட்டப்படி எழுதப்பெற்றது]

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,
அவர்கள் குமாரர்
**வி. சூ. சுவாமிநாதன் அவர்களும்**
சென்னை, எம். சிடி. முத்தையாச் செட்டியார்
உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர்
**வித்துவான், பி. எஸ். சண்முகம் பிள்ளை அவர்களும்**
தொகுத்தது.



**வி. சூ. சுவாமிநாதன்**
பிரசுரகர்த்தர்

மேலக்கோபுரத் தெரு, மதுரை. | சுங்குராம செட்டி தெரு, சென்னை.

 [அணா 8 — ந. பை. 50

# முகவுரை

1957ஆம் ஆண்டில் அரசியலார் வெளியிட்டுள்ள, இணைக்கப் பெற்ற ஆரம்பக் கல்வி தமிழ்ப் பாடத் திட்டப்படி மூன்ரும் வகுப்புக்கென இப் புத்தகம் எழுதப் பெற்றுள்ளது.

இரண்டாம் வகுப்புப் புத்தகத்தின் தொடர்ச்சியாக உயர்ந்த நடை, புதுச் சொற்கள் முதலியன இதில் படிப்படியாகப் புகுத்தப் பெற்றுள்ளன. எளிய கட்டுக் கதைகள், பிராணிக் கதைகள், எளிய விஷயங்களைப் பற்றிய உரையாடல்கள், புலவர்களின் வாழ்க்கைப் பகுதிகள், பள்ளியிலும் வீட்டிலும் மாணவர்களின் வேலைகள்—இத்தகைய உரை நடைப் பாடங்கள் இப் புத்தகத்தில் இடம்பெற்றுள்ளன.

நெற்பானையும் எலியும், செந்தமிழ் நாடு, ஔவை, உலகப் போக்கு, மரமும் மாடும், புத்தகசாலை முதலிய எளிய பாடல்களும், வெற்றிவேற்கை, வாக்குண்டாம் ஆகிய நீதிச் செய்யுள்களும் தேவையான அளவில் சேர்க்கப்பெற்றுள்ளன.

உரை நடைப் பாடங்களிலும் எல்லாச் செய்யுட் பாடங்களிலும் வரும் புதுச் சொற்கள், பாடத் திட்டத்தில் கண்டபடி சுமார் 700 உள்ளன. இச் சொற்களைப் பொருள் தெரிந்து உபயோகிக்குமாறு செய்யும் பயிற்சிகளும் கற்றவற்றை மனத்திற் பதிய வைக்கத் தக்க வினக்களும் ஒவ்வொரு பாடத்திலும் கொடுக்கப் பெற்றுள்ளன. இத்தகைய வினக்களையும் மொழிப் பயிற்சிகளையும் ஆசிரியர்கள் தாமே மேலும் சில தயாரித்துப் பயன்படுத்தலாம்.

தொகுத்தோர்

# பொருளடக்கம்

---

## நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா,
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா,
விந்த்ய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா,
தவசுப நாமே ஜாகே,
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா,
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா,
ஜய ஹே! ஜய ஹே! ஜய ஹே!
ஜய ஜய ஜய, ஜய ஹே!

—ரவீந்திரநாத தாகூர்

---

## பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.
நின் திருநாமம், பஞ்சாப்பையும் ஸிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.
அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன;
நின் புகழைப் பாடுகின்றன;
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

---

Correct Version used. Vide R. C. No. 33/TBC/56 dated 12-7-'56.

# 1. பாரதியார்

தமிழ் நாட்டின் தென் பகுதியில் உள்ளது திரு நெல்வேலி மாவட்டம். அதில் கோவில்பட்டி என்ற தாலூகாவில் எட்டயபுரம் என்ற ஓர் ஊர் இருக் கிறது. இது ஒரு சமீனாக இருந்தது. சுமார் ஐம்பது, அறுபது வருடங்களுக்கு முன்னே சின்னச்சாமி ஐயர் தம் மனைவியாகிய லட்சுமி அம்மாளுடன் அங்கு வாழ்ந்துவந்தார். இவர்களுக்கு 1882ஆம் வருடம் ஒரு புதல்வர் தோன்றினர். அந்தப் புதல்வருக்குச் சுப்பிர மணியன் என்று பெயரிட்டு அருமையாய் வளர்த்து வந்தனர். இவரது ஐந்தாம் வயதில் இவருடைய தாயார் காலமானார்.

இவர் தமது ஐந்தாவது வயதில் பள்ளிக்கூடம் சென்றார்; படிப்பில் நல்ல ஊக்கம் காட்டினர். ஏழாம் வயதில் இவரே சொந்த மாய்ச் சிறு பாட்டுக்கள் பாட ஆரம்பித்தார். இவரு டைய கவித் திறமையை அறிந்த புலவர்கள் இவரை பாரதி என்று அழைத்தனர். பாரதி என்ற சொல்லுக்குச் சரசுவதி என்பது பொருள். இது முதல் இவரை எல் லோரும் பாரதியார் என்றே அழைக்கலாயினர்.



பாரதியார் திருநெல்வேலியில் இந்துக் கல்லூரி யில் சிறிதுகாலம் படித்துக் கொண்டிருந்தார். அப் பொழுது இவர் சரமாரியாகக் கவிபாடுவார் என்று

எல்லோரும் பேசிக்கொள்வார்கள். கவியில் 'காள மேகம்' என்பார்கள் இவரை.

சில நாட்களுக்குப் பிறகு இவருடைய தகப்பனுர் இறந்துவிட்டார். ஆகையால் இவர் ஐந்தாம் படிவத்திற்குமேல் படிக்க முடியாமல் போய்விட்டது. இவருடைய தகப்பனுரின் உடன்பிறந்தாள் காசியில் இருந்தார். அந்த அம்மாள் இவரை வரவழைத்து அங்கே படிக்க வைத்தார். அங்கு இவர் இந்தி, வடமொழி முதலியவற்றைக் கற்ருர். அப்பொழுது இவருக்குக் கலியாணம் ஆகியிருந்தது.

இவருக்கு இருபது வயதாகும்போதுதான், இவர் பிறந்த ஊருக்குத் திரும்பி வந்தார். அங்கே சமீன்தாரிடம் சமஸ்தான கவியாயிருந்தார். இவர் சுதந்திர வாழ்வில் விருப்பமுள்ளவர். ஆகையால் இவர் சமஸ்தானப் பதவியைக் கைவிட்டு, மதுரையில் ஒரு பள்ளியில் சிலமாதம் ஆசிரியராக இருந்தார். சில காலம் இந்தியா, பாலபாரதம் என்ற பத்திரிகைகள் நடத்தினுர். இதில் நம் நாட்டு விடுதலையின் இன்றியமையாமையைப்பற்றி அஞ்சாமல் எழுதினுர். அதனுல் அரசாங்கத்தார் இவரைக் கைது செய்ய முயன்றனர். உடனே இவர் தம் குடும்பத்துடன் பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமாயிருந்த புதுச்சேரிக்குச் சென்று அங்குப் பத்து ஆண்டுகள் காலங்கழித்தார். பின்பு சென்னையில் சுதேசமித்திரன் என்ற பத்திரிகைக்கு உதவி ஆசிரியராய் வேலை பார்த்து வந்தார்.

ஒரு தடவை யானை ஒன்றுக்கு விளாங்கனி கொடுக்கப் போனுர். அது மதம் கொண்டிருந்தபடியால் இவரைக் காலால் மிதித்துவிட்டது. அதிலி

ருந்து நோய்வாய்ப்பட்டு 1921ஆம் வருடம் செப்டம்பர் மாதம் இவர் இவ்வுலகைத் துறந்தார்.

இவர் நாட்டுப் பற்றைத் தூண்டும் பாடல்கள் பல பாடியிருக்கிருர். அவைகளை எல்லாம் சேர்த்துப் பெரிய புத்தகங்களாக அச்சிட்டிருக்கிருர்கள். இவருக்கு இரண்டு பெண்கள் உண்டு. அவர்களில் இளைய மகளுக்காகப் பாடிய பாட்டுத்தான் பாப்பாப் பாட்டு. பாரதியாரின் பாடல்களை நீங்கள் எல்லோரும் நன்கு படிக்கவேண்டும்.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| தமிழ் | சரமாரி | கழி | பதவி |
| திறமை | கல்லூரி | வயது | பிறகு |
| அருமை | தாலூகா | இந்தி | மதம் |
| வாழ்வு | சுமார் | மிதித்து | உலகம் |
| கைவிட்டு | சரசுவதி | இறந்து | புதல்வர் |
| முயன்றனர் | விடுதலை | பொருள் | ஊக்கம் |
| இளைய | படிவம் | பகுதி | தூண்டும் |
| நன்கு | நடத்து | கலியாணம் | வடமொழி |
| விளாங்கனி | புத்தகம் | அஞ்சாமல் | கைதுசெய் |
| காலமானுர் | ஆரம்பி | தகப்பனுர் | துறந்தார் |
| பத்திரிகை | வரவழை | அச்சிட்டு | மாவட்டம் |
| சமஸ்தானகவி | நோய்வாய் | அரசாங்கம் | சொந்தம் |

கேள்விகள்

1. பாரதியார் எந்தெந்தப் பத்திரிகைகளை நடத்திஞர் ?
2. பாரதியார் புதுச்சேரிக்கு ஏன் சென்ருர் ?
3. பாரதியார் எதனுல் நோய்வாய்ப்பட்டு இறந்தார் ?

பயிற்சி

(1) எதிரான பொருளுள்ள சொற்களை எழுது :—
தெற்கு, கிழக்கு, நல்ல, பொழியும்.

(2) மக்கள், தேவர், பிற உயிருள்ள பொருள்கள், உயிரில்லாத பொருள்கள் ஆகியவற்றின் பெயர்களைக் குறிக்கும் சொற்களுக்குப் பெயர்ச் சொற்கள் என்று பெயர்.

(உதாரணம்): வேலன், கண்ணன், பையன், சிறுமியர், மரங்கள், நாய்.

பொருள்களின் தொழில்களைக் குறிக்கும் சொற்களுக்கு **வினைச் சொற்கள்** என்று பெயர்.

(உ-ம்): படிக்கிருன், இருந்தார்கள், இறந்தது, புசி, தூங்கு.

(3) பின்வரும் வாக்கியங்களில் பெயர்ச் சொற்கள் எவை, வினைச் சொற்கள் எவை என்று கூறு:—

1. ஆசிரியர் முருகனை அடித்தார்.
2. மரங்கள் நன்கு வளர்கின்றன.

## 2. திருடனும் சிறுவனும்

ஓர் ஊரில் குடியானவர் ஒருவர் இருந்தார். அவருக்கு ஒரு பிள்ளை உண்டு. அவர் தம் பிள்ளைக் குக் கையில் தங்கக்காப்பு, காதில் வைரக் கடுக்கன் முதலிய நகைகளைப் போட்டிருந்தார்.

அச்சிறுவன் ஒரு நாள் ஊருக்கு வெளியே சென்று ஒரு கிணற்றின் அருகே விளையாடிக் கொண்டிருந்தான். அவ்வழியே சென்ற ஒரு திருடன் அச்சிறுவனைக் கண்டான். உடனே அவன் சிறுவனுடைய நகைகளைத் திருடிச் செல்ல எண்ணங் கொண்டு சிறுவனை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

சிறுவன் அவனுடைய நடையையும், பார்வை யையும் கண்டு அவன் திருடனென்று தெரிந்து கொண்டான். சிறுவனுடைய மனத்தில் அச்சமுண் டாயிற்று. அவன் அழுது கொண்டே நின்ருன்.

திருடன் சிறுவனை நெருங்கி, "பையா! ஏன் அழுகிருய்?" என்று கேட்டான்.

அதற்கு அச்சிறுவன், "ஐயா! நான் இந்தக் கிணற்றில் எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தேன். என் கழுத்தில் இருந்த வைரமாலை கிணற்றில்

விழுந்து விட்டது. நான் வீட்டிற்குப் போனல் என் தகப்பனர் என்னை அடித்துக் கொன்று விடுவாரே! என்ன செய்வேன்?" என்று பொய் சொல்லி மேன் மேலும் அழத்தொடங்கினன்.

திருடன் அந்தச் சொற்களைக் கேட்டான். கிணற்றிலிருக்கும் வைரமாலையை முதலில் எடுத்துக் கொண்டு, பிறகு சிறுவனிடமுள்ள நகைகளைக் கைப் பற்ற எண்ணினன் திருடன். அவன் சிறுவனைப் பார்த்து, "குழந்தாய்! என்னுடைய ஆடைகளை வைத்துக் கொண்டிரு. நான் கிணற்றில் குதித்து உனது நகையை எடுத்துத் தருகிறேன்," என்று சொல்லித் தனது ஆடைகளையும், வேறிடத்தில் திருடி வந்த பொருள்களையும் சிறுவனிடம் கொடுத்து விட்டுக் கிணற்றில் இறங்கினன்.

சிறுவன் இதுவே தக்கதருணமென அறிந்து வீட்டிற்கு ஓட்டம்பிடித்தான். திருடன் தண்ணீரில் முழுகி முழுகிப் பார்த்தும் ஒன்றும் கிடைக்கவில்லை. மேலே வந்து பார்த்தான்; சிறுவனையும் காணவில்லை.

ஒரு சிறுவன் தன்னை ஏமாற்றியதை எண்ணிய திருடன் நாணமுற்று, எவர் கண்ணிலும் படாமல் ஓடி மறைந்தான்.

புதுச்சொற்கள்

| | | |
|---|---|---|
| நடை | குதித்து | நோக்கி |
| அச்சம் | மனத்தில் | ஏமாற்றி |
| கழுத்து | தொடங்கு | தருணம் |
| வைரம் | கேட்டான் | சிறுவன் |
| கடுக்கன் | குடியானவர் | நெருங்கி |
| நாணம் | மேன்மேலும் | பொய் |
| கைப்பற்று | திருடன் | ஆடை |

கேள்விகள்

1. சிறுவன் என்ன என்ன நகைகள் போட்டுக் கொண்டிருந்தான் ?
2. சிறுவன் திருடனிடம் என்ன பொய் கூறினான் ?
3. திருடன் ஏன் நாணமடைந்தான் ?

பயிற்சி

(1) எதிரான பொருளுடைய சொற்களைக் கூறு:—
பார்த்தேன், நெருங்கி, கிடைத்தது, இல்லை.

(2) கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களைச் சேர்த்துப்படி:—
1. சிறுவன் திருடனைக் கண்டு——கொண்டான். (மகிழ்ச்சி, அச்சம்)
2. திருடன் கிணற்றில் தேடிப் பார்த்தபொழுது நகை——(கிடைத்தது, கிடைக்கவில்லை)
3. சிறுவனால் ஏமாற்றப்பட்ட திருடன்——அடைந்தான். (மகிழ்ச்சி, நாணம்)

(3) பின் வரும் வாக்கியங்களில் தகுந்த வினைச்சொற்களை அமைத்துப் படி:—
1. நாங்கள் உணவு——.
2. மாலையில் மாணவர்கள் விளையாடச்——.
3. மழை பெய்தால் பயிர்கள்——.

## 3. காகிதம்

இப்புத்தகம் காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். இந்தக் காகிதம் எப்படி உண்டாகிறது தெரியுமா ?

உபயோகப்படாத கந்தைத் துணிகள், வைக்கோல், சில மரங்கள், சருகுகள், பனை ஓலைகள், வாழைப்பட்டைகள், மூங்கில் முதலியவைகளிலிருந்து காகிதம் செய்யப்படுகிறது. பழைய காகிதங்களிலிருந்தும் புதுக்காகிதம் செய்கிறார்கள். இவைகளை நன்றாகத் தண்ணீரில் ஊறவைப்பார்கள். பிறகு அவற்

றின் அழுக்கை நீக்கிச் சுத்தம் செய்து ஒரு பெட்டியில் போடுவார்கள். அப்பெட்டியில் சுழலக் கூடிய அநேக கத்திகள் உண்டு. அக்கத்திகள் இந்த ஊறின பொருள்களை நன்ருய்ச் சிதைத்துக் கூழாக்கி விடும். இது மரக்கூழ் எனப்படும்.

கூழிலுள்ள தண்ணீரை வடித்து விடுவார்கள். பிறகு தூயநீரில் ஒருவிதச் சுண்ணும்பையோ அல்லது வெள்ளைக் களிமண்ணையோ கரைத்து, அதை முன் தயாரித்த கூழுடன் கலப்பார்கள். அப்போது கூழ் பால்போல் வெண்மையாகும். இக் கூழினுல் செய்யப்பட்ட காகிதம் வெள்ளை நிறமாக இருக்கும். ஆனுல் நாம் பலவித நிறமுள்ள காகிதங்களையும் பார்க்கிருேம். மரக்கூழில் வேண்டிய நிறங்களைச் சேர்த்தால் அந்தந்த நிறமுள்ள காகிதங்கள் ஆகும்.

மரக்கூழை ஒரு கம்பிவலையின்மீது மெல்லிய தகடுபோல் ஊற்றிச் சிறிது நேரம் உலரவைப்பார்கள். அதன்பின் அதை ஒரு மெல்லிய கம்பளத்தின் மீது பரப்பி மற்ருெரு கம்பளத்தால் மூடுவார்கள். இதே மாதிரி மூடிய பல கம்பள அடுக்குகளை ஓர் எந்திரத்தில் வைத்து அழுத்துவார்கள். இவ்வாறு அழுத்தினதும் அவைகளிலுள்ள நீரெல்லாம் வெளியேறிவிடும். அப்போது அவை பலவித அளவுள்ள காகிதங்களாக இருக்கும். இவைகளைப் பின்னும் நன்ருக உலர்த்தி, ஒரே அளவாக அறுத்துக் கட்டுகளாகக் கட்டி விற்பனைக்கு அனுப்புவார்கள்.

இம்மாதிரியான காகிதங்களால்தான் நீங்கள் படிக்கும் புத்தகங்களும், எழுதும் காகிதங்களும் செய்யப்படுகின்றன.

புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| வித | துணி | நீக்கி | மெல்லிய | விற்பனை |
| புது | அச்சு | பரப்பி | கரைத்து | சரகுகள் |
| தூய | உலர | பழைய | வடித்து | சிதைத்து |
| தகடு | அளவு | மூங்கில் | களிமண் | சுண்ணும்பு |
| கத்தி | மாதிரி | காகிதம் | ஊறவை | தயாரித்த |
| சுழல் | ஊற்றி | கம்பளம் | அனுப்பு | வைக்கோல் |
| கந்தை | பனை | அடுக்கு | அறுத்து | உபயோகம் |

கேள்விகள்

1. காகிதம் செய்யப்படும் வகையைக் கூறு.
2. காகிதம் நமக்கு எப்படி உபயோகப்படுகிறது?
3. பலநிறக் காகிதங்கள் செய்வது எப்படி?

பயிற்சி

(1) எதிரான பொருளுடைய சொற்களை எழுது:—
மூடிய; தூய; கட்டுவார்கள்; மெல்லிய.

(2) பின்வரும் வாக்கியங்களில் பெயர்ச் சொற்களுக்குப் பொருத்தமாக வினைச்சொற்களைத் திருத்தி எழுது:—

1. நான் வீட்டுக்குப் போனுன்.
2. மரங்கள் வளர்கிறது.
3. புத்தகங்கள், காகிதங்கள் முதலியன செய்யப்படுகிறது.
4. அவனும் நானும் போகிறேன்.

# 4. கயிறு திரித்தல்

( உரையாடல் )

நாகசாமி: கிணற்றிலிருந்து நீர் இறைக்க உதவும் இந்தக் கயிறு எவ்வளவு வலிமையா யிருக்கிறது, பார்த்தாயா?

கோபு: ஆம், இதை எப்படிச் செய்கிருர்கள் என்று உனக்குத் தெரியுமா?

நாகசாமி: தெரியுமே!

கோபு : எனக்குத் தெரியாது. நீ சொன்னுல் தெரிந்து கொள்கிறேன்.

நாகசாமி: மட்டை உரிக்காத தேங்காயைப் பார்த் திருக்கிருயா ?



கோபு: பார்த்திருக்கிறேன். உளி போன்ற ஓர் இரும்பு முளேயில் அந்தத் தேங்காயை அழுத்தி மட்டை உரிப்பதையும் பார்த்திருக்கிறேன்.

நாகசாமி: ஆம். அந்த மட்டையின் நாரிலுல்தான் இந்தக் கயிறு செய்யப்படுகிறது. உரித்த மட்டைகளே நீரில் நன்ருக ஊறவைப்பார்கள். ஊறின மட்டையை ஒரு கல்லில் வைத்து ஒரு

சுத்தியால் தட்டுவார்கள். இதனுல் நார் மென்மையாகும். பிறகு அந்த நாரைச் சிறிது சிறிதாகச் சேர்த்துக் கையால் திரிப்பார்கள். கையால் திரிப்பதற்குப் பதிலாக, ஒரு சிறு கோலில் கல்லேக் கட்டி அதைச் சுழலச் செய்து கயிறு திரிப்பதும் உண்டு. இந்த மெல்லிய கயிறுகள் புரி என்று சொல்லப்படும். பிறகு இரண்டு மூன்று புரிகளேச் சேர்த்து முறுக்கித் தடித்த கயிறுகளேச் செய்கிருர்கள்.

கோபு: நமது ஊர்த் தேரை இழுப்பதற்குப் பெரிய வடங்கள் இருக்கின்றனவே; அவையும் தேங்காய் நாரினுல் செய்யப்பட்டவையா ?

நாகசாமி: ஆம். அவையும் இந்தக் கயிற்றைப் போலவேதான் முறுக்கப்படுகின்றன.

கோபு: சில கயிறுகள் வேறு மாதிரி நிறத்தோடு இருக்கின்றனவே; அது ஏன் ?

நாகசாமி: தேங்காய் நாரைத் தவிர வேறு நார்களேக் கொண்டும் கயிறுகள் செய்கிருர்கள். பனே நார், சணல் நார் முதலிய நார்களால் முறுக்கப்படும் கயிறுகள் வேறு நிறத்தோடிருக்கும்.

புதுச்சொற்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| புரி | சுத்தி | ஆம் | உதவும் | உரிக்காத | தட்டுவார் |
| வடம் | சணல் | உளி | தவிர | மென்மை | இறைக்க |
| முளே | திரிக்க | சுழல | தேர் | முறுக்கி | வலிமை |

கேள்விகள்

1. தேங்காய் நாரைக் கொண்டு எப்படிக் கயிறு திரிக்கிருர்கள் ?
2, கயிறுகள் செய்ய வேறு என்ன நார்கள் பயன்படுகின்றன ?

## 5. நெற்பானையும் எலியும்

பாட்டியின் வீட்டுப் பழம்பானை—அந்தப்
பானையும் ஒருபுறம் ஓட்டையடா
ஓட்டை வழியொரு சுண்டெலியும்—அதன்
உள்ளே புகுந்துநெல் தின்றதடா. 1

உள்ளே புகுந்துநெல் தின்றுதின்று—வயி
றூதிப் புடைத்துப் பருத்ததடா
மெள்ள வெளியில் வருவதற்கும்—ஓட்டை
மெத்தச் சிறிதாகிப் போச்சுதடா 2



பானையைக் காலை திறந்தவுடன்—அந்தப்
பாட்டியின் பக்கமாய் வந்தவொரு
பூனை எலியினைக் கண்டதடா—ஓடிப்
போயதைக் கௌவியே சென்றதடா. 3

கள்ள வழியிற் செல்பவரை—எமன்
காலடி பற்றித் தொடர்வானடா
உள்ளபடியே நடப்பவர்க்குத் தெய்வம்
உற்ற துணையாக நிற்குமடா. 4

—தேசிக விநாயகம் பிள்ளை.

புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| வழி | புகுந்து | பானை | கள்ள | மெள்ள |
| ஊதி | கௌவி | காலடி | எமன் | ஓட்டை |
| மெத்த | புடைத்து | தொடர் | துணை | சுண்டெலி |
| உற்ற | பருத்தது | பற்றி | உள்ளபடி | செல்பவர் |

கேள்விகள்

1. பழம் பானைக்குள் எலி எவ்வாறு புகுந்தது ?
2. எலி ஏன் பானையிலிருந்து வெளியே வர முடியவில்லை ?
3. காலையில் பாட்டி பானையைத் திறந்ததும் எலி என்ன செய்தது ? எதனிடம் அது அகப்பட்டுக் கொண்டது ?
4. கள்ள வழியில் செல்பவருக்கு என்ன நேரும் ?

# 6. உப்பு

நமது உணவில் மிகவும் முக்கியமாக இருப்பது உப்பு. உப்பு இல்லாத எந்தப் பண்டமும் சுவையாய் இராது. அதிக நாள் கெடாமல் இருக்கவேண்டிய உணவுப் பண்டங்களுக்கு உப்பைச் சேர்க்கிறார்கள். இதனாலேயே 'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்ற பழமொழி வழங்கிவருகிறது. உப்பு வெண்மை நிறமுள்ள ஒரு பொருள். அது தண்ணீரில் கரையக் கூடியது. இதனால்தான் நாம் உப்பை உணவுப் பொருள்களில் சேர்க்க முடிகிறது.

உப்பு எடுக்கும் விதங்கள் இரண்டு. முதலாவது கடல் நீரிலிருந்து உப்பு எடுக்கப்படுகிறது. கடல் நீரைச் சிறு வாய்க்கால்கள் மூலம் உப்புச் செய்யும் இடத்திற்குக் கொண்டு போவார்கள். உப்புச் செய்யப்படும் இடம், ஆழமில்லாத சிறு பாத்திகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும். வாய்க்கால் வழியாக வரும் கடல் நீரைச் சிறிது சிறிதாக இப்பாத்திகளில் நிரப்புவார்கள். பாத்திகளில் தங்கும் நீரெல்லாம் சூரிய வெப்பத்தினால் சில நாட்களில் ஆவியாக மாறிப்

போய்விடும். அதிலுள்ள உப்பெல்லாம் பாத்திகளிலேயே தங்கிவிடும். இவ்வுப்பை எடுத்து ஒன்ருகச் சேர்ப்பார்கள். சில நாட்கள் சென்றதும் அவைகளைக் குவியலாகக் குவித்து வியாபாரிகளுக்கு விற்பார்கள். இவ்வாறு உப்புச் செய்யும் இடங்களுக்கு **உப்பளங்கள்** என்று பெயர்.

நமது சென்னை மாநிலத்தில் கடற்கரை ஓரமாகப் பல உப்பளங்கள் இருக்கின்றன. அவற்றில் உப்பு விளைவிக்கும் உரிமை உள்ளவர்கள், அரசாங்கத்திற்கு உரிய கட்டணம் செலுத்தவேண்டும். விளைவிக்கப்படும் உப்பு, பொதுமக்களின் உபயோகத்திற்காக மொத்த வியாபாரிகளுக்கு விற்கப்படும்.

இரண்டாவது, சில இடங்களில் நிலத்திலிருந்து உப்பு எடுக்கப்படுகிறது. பூமியில் பெரிய சுரங்கங்கள் வெட்டி உப்பு எடுக்கிருர்கள். ஆனல் இவ்வுப்பு, மண்ணேடும் வேறு அசுத்தங்களோடும் கலந்திருக்கும். ஆகையால் உப்பைத் தண்ணீரில் கரைத்துப் பின் வடிகட்டிக் காய்ச்சி சுத்தம் செய்யவேண்டும். இம்மாதிரி உப்புச் சுரங்கங்கள் ஐரோப்பாக் கண்டத்தில் பல இருக்கின்றன. நம் நாட்டில் ராசபுதனத்திலும் உப்புச் சுரங்கங்கள் இருக்கின்றன.

நமது உணவுடன் உப்பைச் சேர்ப்பதால், உடம்பிலுள்ள எலும்புகள் பலப்படுகின்றன. உப்பு சீரண சக்தியை அதிகப்படுத்தும். உப்பு இல்லாவிட்டால் உணவுப் பண்டங்கள் சுவையாயிருப்பதில்லை. உப்பு இல்லாவிட்டால் உயிர் இல்லை. உப்பு அளித்தவன் உயிர் கொடுத்தவன். இதனல்தான் **உப்பிட்டவரை உள்ளளவும் நினை,** என்ற பழமொழி வழங்குகிறது.

### புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| நினை | பூமி | உரிமை | வெட்டி | சீரண |
| சக்தி | உரிய | மா நிலம் | வியாபாரி | சுரங்கம் |
| உயிர் | பொது | நிரப்பு | கண்டம் | கெடாமல் |
| ஆழம் | விளைவி | வெப்பம் | அசுத்தம் | உப்பளம் |
| மூலம் | குவியல் | முக்கியம் | வடிகட்டி | பழமொழி |
| விற்க | வழங்கி | வாய்க்கால் | வெண்மை | கட்டணம் |
| பாத்தி | காய்ச்சி | பலப்படு | கரைய | பண்டம் |

### கேள்விகள்

1. கடல் நீரிலிருந்து உப்பு எப்படி எடுக்கப்படுகிறது?
2. உப்புச் சுரங்கம் என்பது என்ன?
3. உப்பு நமக்கு எவ்வாறு பயன்படுகிறது?
4. இப்பாடத்தில் வந்துள்ள பழமொழிகளை எழுது.

### பயிற்சி

(1) ஒன்றைக் குறிக்கும் சொல் ஒருமை என்றும் பலவற்றைக் குறிக்கும் சொல் பன்மை என்றும் சொல்லப்படும்.

பின் வரும் சொற்றொடர்களில் உள்ள பெயர்ச் சொற்களுக்கும் வினைச் சொற்களுக்கும் ஒருமை, பன்மை கூறு:—

1. கடல் நீரை சிறு வாய்க்கால்கள் மூலம் உப்பளங்களில் பாயச் செய்வார்கள்.
2. உப்பு வெண்மை நிறமுள்ள ஒரு பொருள்.
3. உப்பு, மண்ணோடும் வேறு பொருள்களோடும் கலந்திருக்கும்.

(2) மாதிரியில் காட்டப்பட்டுள்ளது போல் சொற்றொடர்களை இட்டு எழுதுக:—

1. நாங்கள் நேற்று விளையாடினோம்.
2. நாங்கள் இப்பொழுது——.
3. நாங்கள் நாளை——.
4. நீங்கள் நாளை——.
5. அவர்கள் நேற்று——.

# 7. கட்டபொம்மன்

நீங்கள் வீரபாண்டிய கட்டபொம்மனைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். இவர் பாஞ்சாலங்குறிச்சி என்ற ஊரில் ஒரு சிற்றரசராயிருந்தார். ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போரிட்டுப் பல வீரச் செயல்களைப் புரிந்து புகழ்பெற்ருர்.

கட்டபொம்மன் ஆண்டுவந்த காலத்தில், ஆங்கிலேயர்கள் நம் நாட்டில் பல பகுதிகளைக் கைப்பற்றி ஆட்சி செய்யத் தொடங்கியிருந்தார்கள். சிற்றரசர்களிடம் கப்பம் வாங்கும் அதிகாரம் அவர்கள் கையில் இருந்தது. சிற்றரசர்களுக்குள் ஒற்றுமை இல்லை; ஆகவே அவர்கள் ஆங்கிலேயருக்குப் பணிந்து கப்பம் கட்டிவந்தார்கள். ஆனல் கட்டபொம்மன் மட்டும், "என்ன வந்தாலும் சரி! அந்நியருக்குக் கப்பம் கட்டித் தலைகுனிய மாட்டேன்," என்று சொல்லிவிட்டார்.

ஆங்கிலேய அதிகாரிகள் அவர்மீது கோபம் கொண்டனர். அவருடைய போர் வீரத்தை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆகவே அவரைப் பிடிக்கச் சூழ்ச்சிகள் செய்தார்கள்.

அக்காலத்தில் திருநெல்வேலி மாவட்டத்திற்கு ஜாக்ஸன் என்பவர் 'கலெக்டராக' இருந்தார். தம்மை நேரில் வந்து பார்க்கும்படி அவர் கட்டபொம்மனுக்குக் கடிதம் எழுதினர்.

கடிதத்தைக் கண்ட கட்டபொம்மன் ஜாக்ஸனுடைய கருத்தை அறிந்து வரலாமென எண்ணிப் புறப்பட்டுச் சென்ருர்.

ஜாக்ஸன் கட்டபொம்மனைத் தக்கமுறையில் வரவேற்கவில்லை. அவரைக் கண்டவுடனேயே ஜாக்

ஸன், "நீர் கப்பத்தைக் கட்டியே தீரவேண்டும். இல்லாவிடில், உம்மைச் சிறையில் அடைப்போம்" என்று சொல்லி மிரட்டினுர்.

இதைக் கேட்ட கட்டபொம்மன் கொதித்தெழுந்து, "ஜாக்ஸன் துரையே! உமது பேச்சு என் போன்ற தமிழரின் செவிக்குக் கசப்பானது. உம்முடன் பேச நான் விரும்பவில்லை," என்று சொல்லி எழுந்தார்.

அப்பொழுது அங்கே முன்னேற்பாடாக ஒளிந்திருந்த பத்து வீரர்கள் அவரைப் பிடிக்கப் பாய்ந்தார்கள். உடனே கட்டபொம்மன் தம் உடைவாளை உருவிக்கொண்டு தாம் ஒருவராகவே ஆங்கிலேய வீரர்களுடன் சண்டை செய்தார். தம்மைத் துப்பாக்கியால் சுட வந்த கிளார்க் என்பவனை அவர் வாளால் வெட்டி வீழ்த்தினுர். எதிர்த்த எல்லா வீரர்களையும் தம் வாளுக்கு இரையாக்கிவிட்டு அவர் அங்கிருந்து வெளியேறினுர். கட்டபொம்மனின் வீரத்தைக் கண்டு ஜாக்ஸன் திகைத்து நடுங்கினுர்.

இப்படிப் பல வீரச் செயல்களைச் செய்த கட்டபொம்மனை ஆங்கிலேயர் முடிவாகச் சிறை செய்து தூக்கிலிட்டனர். எனினும் அவர் கடைசிவரை அந்நியருக்குத் தலை வணங்க மறுத்துவிட்டார். வாழ்க கட்டபொம்மனின் வீரம்!

புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| செவி | கப்பம் | பணிந்து | வீரம் | பாண்டிய |
| முறை | சூழ்ச்சி | கலெக்டர் | மட்டும் | உடைவாள் |
| துரை | வீழ்த்து | மிரட்டினுர் | முடிவாக | கசப்பானது |
| செயல் | மறுத்து | தூக்கிலிடு | எனினும் | வெளியேறு |

உருவி ஒளிந்து ஒற்றுமை எதிர்த்து அடைப்போம்
புரிந்து கருத்து கொதித்து அதிகாரம் ஆண்டுவந்த
வணங்கு தலைகுனி அந்நியர் திகைத்து இரையாக்கு

கேள்விகள்

1. கட்டபொம்மன் எந்த ஊரில் சிற்றரசராக இருந்தார்?
2. ஆங்கிலேயர் ஏன் தமிழ் நாட்டில் ஆட்சி செய்ய முடிந்தது?
3. கட்டபொம்மன் ஏன் ஜாக்ஸனைக் காணச் சென்றார்?
4. கட்டபொம்மனைப் பிடிக்க ஜாக்ஸன் செய்த சூழ்ச்சி என்ன? அது எப்படித் தோல்வியடைந்தது?

பயிற்சி

(1) பின் வரும் சொற்களில் ஒருமையைப் பன்மையாகவும், பன்மையை ஒருமையாகவும் மாற்று:—

மரம், கல், நான், நீர், இருக்கிறது, வந்தன, போகிறோம்.

(2) பின் வரும் வாக்கியங்களில் ஒருமைகளைப் பன்மைகளாகவும், பன்மைகளை ஒருமைகளாகவும் மாற்று:—

1. மாடு மேய்ந்தது.
2. வீரர்கள் போர்க்களத்திலிருந்து ஓடுகிறார்கள்.
3. நாளை நான் உன்னுடன் வருவேன்.

## 8. திருவிழா

(உரையாடல்)

**நக்கீரன்:** நெடுஞ்செழியா! வா, வா. நல்ல தருணத்தில் வந்தாய்.

**நெடுஞ்செழியன்:** என்ன நல்ல தருணம்?

**நக்கீரன்:** நான் சித்திரைத் திருவிழாவிற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நீயும் வருகிறாயா?

**நெடுஞ்செழியன்:** சித்திரைத் திருவிழாவைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று எனக்கு விருப்பம்தான். ஆனால் என் பெற்றோர் இணங்கவேண்டுமே!

நக்கீரன் : உனக்கு விருப்பந்தானே! நான் உன் தந்தையிடம் சொல்லி அனுமதி பெறுகிறேன்.

நெடுஞ்செழியன் : சரி. சித்திரைத் திருவிழாவில் கூட்டம் அதிகமிருக்குமோ ?

நக்கீரன் : கூட்டமா! அவ்வளவு பெரிய கூட்டத்தை நீ எங்கும் பார்த்திருக்கமாட்டாய். மீனுட்சி



யம்மன் திருவிழா என்ருல் பக்கத்து ஊர்களில் இருந்தெல்லாம் மக்கள் வந்து கூடுவார்கள். தொலை தூரத்திலிருந்தும் மக்கள் வருவார்கள்.

நெடுஞ்செழியன் : புதுக்கடைகள் வந்திருக்குமோ ?

நக்கீரன் : தெருவெல்லாம் கடைகளாகத்தானிருக்கும். விளையாட்டுச் சாமான்களையும் தின்பண்டங்களையும் வண்டிகளில் வைத்துத் தள்ளிக்கொண்டு விற்பவர்கள் எங்கும் இருப்பார்கள். தெரு ஓரங்களிலுள்ள நடைபாதைகள் எல்லாம் கடைகள் தான்.

**நெடுஞ்செழியன் :** சுவாமி புறப்பாடு எல்லாம் பார்க்கலாமா ?

**நக்கீரன் :** நன்றுகப் பார்க்கலாம். என்னுடைய மாமா வீடு கோவில் வாயிலுக்குப் பக்கத்தில் இருக்கிறது. அந்த வீட்டு வாயில் திண்ணையிலிருந்து சுவாமி புறப்படுவதை நாம் முதலில் பார்க்கலாம்.

**நெடுஞ்செழியன் :** திருவிழாவில் வேறு என்ன பார்க்கலாம் ?

**நக்கீரன் :** சுழல் ராட்டினங்கள் பல தெருக்களில் இருக்கும். அவற்றில் ஏறிச் சுற்றலாம். இரவில் 'சினிமாப்' படக்காட்சி ஏதேனும் பார்க்கலாம்.

**நெடுஞ்செழியன் :** நான் மதுரைக்கு வருகிறேன். நீ என் தந்தையிடம் சொல்லி அவர் அனுமதியைப் பெற்றுக்கொள்.

**நக்கீரன் :** உன் தந்தையிடம் போகலாம், வா.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| சுவாமி | தொலே | கடை | வாயில் |
| தள்ளி | சுற்றலாம் | சினிமா | ஏதேனும் |
| திருவிழா | புறப்பாடு | இணங்க | அம்மன் |
| அனுமதி | ராட்டினம் | படக்காட்சி | நடைபாதை |

கேள்விகள்

1. மதுரையில் உள்ள புகழ் பெற்ற கோவில் எது ?
2. திருவிழாக் காலத்தில் ஊரில் என்ன என்ன கடைகள் அதிகமாக இருக்கும் ?

பயிற்சி

நீ பார்த்த திருவிழா ஒன்றைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.

# 9. படப் பயிற்சி—1.

## சிங்கத்தின் நன்றி

பின் வரும் படங்களைப் பார்த்து ஒவ்வொரு படத்தைப் பற்றியும் ஒரு வாக்கியம் எழுது. பிறகு அவற்றைச் சேர்த்துக் கதை சொல்லு.



# 10. கோழி

குடியானவர்கள் ஆடு மாடுகளை வளர்ப்பது போலவே கோழிகளையும் வளர்க்கிறார்கள். கோழி, பறவை இனத்தைச் சேர்ந்தது. ஆனால் அது மற்றப் பறவைகளைப்போல் அதிக உயரம் பறக்காது. எட்டு அல்லது பத்து அடி உயரம் தாவுவதுபோல் பறந்து, ஓடுகளிலும் உட்காரும்.





கோழி பார்ப்பதற்கு அழகாயிருக்கும். அது வெண்மை, கருமை, சிவப்பு, பழுப்பு முதலிய பல நிறமான சிறகுகளை உடையது. பெண் கோழியைப் பெட்டைக்கோழி என்றும் ஆண் கோழியைச் சேவல் என்றும் சொல்வது வழக்கம். பெட்டைக்கோழியை விடச் சேவல் பெரிதாகவும் அழகாகவுமிருக்கும். சேவலுக்குத் தலையில் கொண்டையுண்டு. பெட்டைக் கோழிக்கு அது இல்லை.

கோழி குப்பையைக் கால்களால் கிளறித் தானிய மணிகளைத் தன் அலகால் பொறுக்கித் தின்னும். ஆகையால் அதற்கேற்றபடி அதன் கால்களும் அலகுகளும் அமைந்திருக்கும். கோழிக்கு இரண்டு கால்களிலும், முன்பக்கம் மூன்றும் பின் பக்கம் ஒன்றுமாக நான்கு தடித்த விரல்கள் உண்டு. பின்

விரல் வளைவதில்லை. விரல்களிலுள்ள நகங்கள் சிறியவையாவும் கூரில்லாமலும் இருக்கும்.

வீட்டுக் கோழிகள், தவிடு, நெல், சோளம். கேழ்வரகு முதலியவற்றை உணவாகக் கொள்ளும், குப்பைகளில் கிடைக்கும் புழு பூச்சிகளையும் தின்னும்.

சாதாரணப் பெட்டைக்கோழி ஓர் ஆண்டில் ஐம்பது அறுபது முட்டைகள் இடுவதுண்டு. ஒரு காலத்தில் நாள் ஒன்றுக்கு ஒரு முட்டையாகப் பத்துப் பதினைந்து முட்டையிட்டுப் பிறகு அவற்றின் மேல் இருந்து, அடைகாத்துக் குஞ்சுபொரிக்கும். பொரித்த குஞ்சுகளைத் தன் சிறகால் அணைத்துத் தீங்கு நேராமல் காப்பாற்றும். குஞ்சுகள் முட்டையி லிருந்து வெளிப்பட்டுக் கொஞ்ச நேரம் ஆனவுடன் தாமாகவே இரைபொறுக்கித் தின்ன ஆரம்பிக்கும். கோழி மற்றப் பறவைகளைப்போல தன் குஞ்சு களுக்கு இரை ஊட்டுவதில்லை. தாய்க்கோழி இரை பொறுக்குவதைப் பார்த்துக் குஞ்சுகளும் பழகிக் கொள்ளும்.

நோய்களைப் பரப்பும் புழு பூச்சிகளைக் கோழிகள் தின்று நமக்கு நன்மை செய்கின்றன. கோழியின் இறைச்சியையும் முட்டைகளையும் பலர் உணவாக உபயோகிக்கிறார்கள்.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| சிறகு | தீங்கு | கருமை | புழு |
| ஊட்டு | தவிடு | ஓடுகள் | பழகி |
| சோளம் | நேராமல் | கேழ்வரகு | தாவு |
| இனம் | பொறுக்கு | அணைத்து | பழுப்பு |
| பரப்பு | வெளிப்படு | அடைகாத்து | கிளறு |

கேள்விகள்

1. கோழிக் குஞ்சுகள் எப்படி உண்டாகின்றன ?
2. சேவலைப்பற்றி உனக்குத் தெரிந்ததைக் கூறு.
3. கோழியின் உபயோகங்கள் யாவை ?

பயிற்சி

(1) கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி:—

1. கோழி அதிக உயரம்——.
2. ஆண் கோழிக்கு——என்று பெயர்.
3. பெட்டைக்கோழி——இட்டு,——அடைகாக்கும்.
4. புழு பூச்சிகளைக் கோழி தின்பதால், கோழி நமக்கு——செய்கிறது.

(2) பின்வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்ச் சொற்களில் எது ஒருமை, எது பன்மை என்று கூறு:—

1. குடியானவர்கள் ஆடுமாடுகளை வளர்ப்பதுபோல் கோழிகளையும் வளர்க்கிறார்கள்.
2. கோழி குப்பையைக் கால்களால் கிளறித் தானியமணிகளை அலகால் பொறுக்கித் தின்னும்.

# 11. கடற்கரையும் துறைமுகமும்

(உரையாடல்)

**துரை :** சேகர்! சென்னைக்குப் போயிருந்தாயே, கடற்கரையைப் பார்த்தாயா ?

**சேகர் :** ஓ! அது அவ்வளவு அழகாக இருக்கிறது தெரியுமா ?

**துரை :** கடல் பார்ப்பதற்கு எப்படி இருக்கிறது ?

**சேகர் :** கடல் நீல நிறமாக இருக்கிறது. கண்ணுக்கு எட்டிய வரையில் ஒரே நீல நிறமான தண்ணீர் தான். சென்னைக் கடற்கரையில் அகன்ற மணற் பரப்பு இருக்கிறது.

**துரை :** கடற்கரையில் நல்ல காற்று வீசுமோ ?

**சேகர் :** மாலே வேளைகளில் கடலிலிருந்து காற்று வீசும். அதற்குக் கடற் காற்று என்று பெயர். கடற் காற்றுக்காகவே மாலேயில் கூட்டங்கூட்டமாக மக்கள் கடற்கரை மணலில் வந்து உட்காருகிருர்கள்.

**துரை :** கடற்கரையில் இன்னும் என்ன பார்த்தாய்?



சேகர் : அங்கே அலே மோதுகின்ற கரையோரமாகக் கட்டுமரங்கள் இருக்கின்றன. செம்படவர்கள் இவற்றில் ஏறிக்கொண்டு கடலில் சென்று மீன் பிடிக்கிருர்கள்.

**துரை :** சென்னேயில் நீ கப்பலேப்போய்ப் பார்த்தாயா?

**சேகர் :** ஒரு கப்பலேப் பார்த்தேன்.

**துரை :** துறைமுகம் என்கிருர்களே, அது என்ன ?

**சேகர் :** கப்பல்கள் வந்து தங்குமிடத்திற்குத் துறைமுகம் என்று பெயர். கப்பலில் வரும் பிரயாணி

கள் துறைமுகத்தில் இறங்குவார்கள். சமான்கள் இறக்குமதி செய்யப்படும்.

**துரை :** தண்ணீரில் கப்பல் எப்படிச் செல்கிறது ?

**சேகர் :** கப்பலில் ஒரு எஞ்சின் இருக்கிறது. இரயில் வண்டி நீராவியால் ஓடுவதுபோல், கப்பலும் நீராவியால் செல்லுகிறது; இக்கப்பலுக்கு நீராவிக் கப்பல் என்று பெயர்.

**துரை :** கடற்கரைக்கு அருகில் கப்பல் எப்படி வந்து நிற்கிறது ?

**சேகர் :** சென்னைத் துறைமுகத்தில் கரைக்கருகில் கடல் ஆழமாகத் தோண்டப்பட்டிருக்கிறது. அதனுல் கரைக்கு அருகில் கப்பல்கள் வந்து நிற்கின்றன.

**துரை :** இரவில் கப்பலைச் செலுத்துபவர்களுக்குக் கரை தெரியுமா ?

**சேகர் :** துறைமுகங்களில் உயர்ந்த விளக்குத் தம்பங்களை நிறுத்தியிருக்கிருர்கள். அவைகளின் பிரகாசமான விளக்குகள் இரவெல்லாம் எரியும். அவற்றின் உதவியால் மாலுமிகள் கடற்கரையைத் தெரிந்து கொள்வார்கள்.

**துரை :** நாமெல்லாம் ஒரு தடவையாவது கப்பலில் பிரயாணம் செய்து பார்க்க வேண்டாமா ?

**சேகர் :** அடுத்த பெரிய விடுமுறையில் எங்கள் வீட்டில் எல்லோரும் இலங்கைக்குப்போகிருேம். நீயும் வந்தால் அழைத்துச் செல்லுகிறேன்.

## புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| மணல் | கப்பல் | மோது | பிரயாணி |
| வீசு | அகன்ற | எரியும் | செலுத்து |
| அலே | வெறும் | நிறுத்தி | விடுமுறை |
| நீலம் | தோண்ட | வரையில் | பிரகாசமான |
| கட்டுமரம் | மாலுமி | இறக்குமதி | செம்படவர் |
| எட்டிய | சாமான் | துறைமுகம் | விளக்குத்தம்பம் |

## கேள்விகள்

1. கடல் பார்ப்பதற்கு எப்படியிருக்கும்?
2. கடல் நீரின் சுவை என்ன?
3. கடல் காற்று என்றல் என்ன?
4. கட்டுமரம் யாருக்கு எதற்குப் பயன்படுகிறது?
5. நீராவிக் கப்பல் எதனுல் செல்லுகிறது?
6. விளக்குத் தம்பம் எதற்கு உதவுகிறது?

## பயிற்சி

(1) பின் வரும் வாக்கியங்களிலிருந்து பெயர்ச் சொற்களேயும் வினேச் சொற்களேயும் எடுத்து எழுது:—

1. கடற்கரையில் நல்ல காற்று வீசும்.
2. மாலேயில் பல மக்கள் கடற்கரை மணலில் வந்து உட்காருகிருர்கள்.

(2) முதல் பத்தியிலுள்ள ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான சொற்களே இரண்டாம் பத்தியிலிருந்து எடுத்து எழுது:—

| | |
|---|---|
| துறைமுகம் | காற்றினுல் தள்ளப்படும் |
| விளக்குத் தம்பம் | மீன் பிடிக்க உதவும் |
| கட்டுமரம் | கப்பல்கள் தங்குமிடம் |
| பாய்மரக் கப்பல் | இரவெல்லாம் விளக்கெரியும் |

# 12. வேடனும் புருக்களும்

பறவை பிடிக்கும் வேடன் ஒருவன், ஒரு காட்டில் தன் வலேயை விரித்து, தானியங்களே அதில் தூவிவிட்டு ஒரு பக்கத்தில் ஒளிந்திருந்தான். அப்போது பக்கத்திலிருந்த மரத்தின்மேல் ஒரு புருக் கூட்டம் வந்திறங்கியது. புருக்கள் அங்கு தூவப் பட்டிருந்த தானியங்களேத் தின்ன ஆவல் கொண் டன. அப்போது அக்கூட்டத்துக்குத் தலேமையான சித்திரக்கிரீவன் என்னும் புரு மற்றவைகளே நோக்கி, "மனிதர் இல்லாத இக்காட்டில் தானியம் எப்படி வந் தது? இதில் ஏதோ சூது இருக்கிறது. நன்ருய் எண்ணிப் பார்த்த பிறகுதான் நாம் கீழே இறங்க வேண்டும்," என்றது.

ஆனல் பசியோடிருந்த மற்றப் புருக்கள் சித்தி ரக்கிரீவனுடைய பேச்சைக் கேட்கவில்லே. உடனே அவை, கீழே இறங்கித் தானியத்தைத் தின்ன ஆரம் பித்தன; அதனல் வலேயில் அகப்பட்டுத் தத்தளித் தன. இதைக் கண்ட சித்திரக்கிரீவன், "ஐயோ! என் இனத்தார் யாவரும் வலேயில் அகப்பட்டுக்கொண் டார்கள். நான் ஒருவன் தப்பித்து என்ன பயன்?" என்று எண்ணி, அதுவும் வலேயில் அகப்பட்டுக் கொண்டது. புருக்கள் எல்லாம் சித்திரக்கிரீவன் சொல்லியதைக் கேட்காததற்காக வருத்தப்பட்டன.

அப்போது சித்திரக்கிரீவன் மற்றப் புருக்களேப் பார்த்து, "நடந்ததை நினேத்து வருந்துவதால் என்ன பயன்? இப்போது நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து, வலேயைத் தூக்கிக்கொண்டு பறந்துசெல்ல வேண்டும். இல்லாவிடில் நாம் தப்ப வழியில்லே,"

என்று கூறியது. இதற்குள் புருக்களெல்லாம் வலை யில் அகப்பட்டுக் கொண்டதைக் கண்ட வேடன், மகிழ்ச்சியுடன் அவைகளைப் பிடிக்கச் சென்றான். அப்போது எல்லாப் புருக்களும் ஒற்றுமையாக வலை யுடன் பறந்துபோயின.



இதைக் கண்ட வேடன் வியப்படைந்து அவை களின் பின்னேயே ஓடினான். புருக்களோ கண் ணுக்கு எட்டாத தூரத்தில் போய்விட்டன. வேட னும் வருத்தத்துடன் வீடு திரும்பினான். சித்திரக் கிரீவனும் புருக் கூட்டமும் மற்றொரு வனத்தில் போய் இறங்கின. அவ்வனத்தில் சித்திரக்கிரீவ னுடைய நண்பனான இரணியகன் என்னும் எலி இருந்தது. புருக்கள் இறங்கிய ஓசை கேட்ட இரணியகன், தன் வளையிலிருந்து வெளியே வந்து, "நண்பா! என்ன செய்தி?" என்று கேட்டது.

அதற்குச் சித்திரக்கிரீவன், "நண்பனே! நாங்கள் மூடத்தனமாய் இவ்வலையில் சிக்கிக்கொண்டோம். உன் கூர்மையான பற்களால் இந்த வலையைக் கடித்து, அறுத்து எங்களை விடுவி," என்றது. இரணியகனும் அவ்வாறே செய்தது. எல்லாப் புருக்களும் விடுபட்டு மகிழ்ந்தன.

## சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை

### புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| தூவு | ஆவல் | சிக்கி | தப்பி | எட்டாத |
| சூது | மற்ற | பேச்சு | தூக்கி | தலைமை |
| வலை | வனம் | பார்த்த | வியப்பு | தத்தளி |
| விடுவி | செய்தி | கடித்து | சிறந்த | மூடத்தனம் |
| விரித்து | வருத்தம் | காட்டில் | நண்பன் | இல்லாவிடில் |

### கேள்விகள்

1. புருக்கள் எதனுல் துன்பத்திற்குள்ளாயின ?
2. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம் என்பதை இக்கதையின் மூலம் விளக்கு.
3. புருக்கள் வலையையும் தூக்கிக்கொண்டு வேடனுக்கு அகப்படாமல் பறந்தோட அவைகளிடம் காணப்பட்ட குணம் என்ன ?

### பயிற்சி

(1) பின் வரும் வார்த்தைகளை வாக்கியங்களில் அமை :—
அகப்பட்டு; விரித்து; வனத்தில்; அனைவரும்; மூடத்தனமாய்; இனத்தார்; ஒற்றுமை; கூர்மை.

(2) கோடிட்ட இடங்களில் தகுந்த வார்த்தைகளை அமை :—
1. புருக்களோ———எட்டாத தூரத்தில் போய்விட்டன.
2. வேடனும்———வீடு திரும்பினுன்.
3. சித்திரக்கிரீவனும் புருக்கூட்டமும் ——— வனத்தில் போய் இறங்கின.

# 13. செந்தமிழ் நாடு

செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. 1

காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர்வையை பொருனை நதி—யென
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ் நாடு. 2

கல்வி சிறந்த தமிழ் நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ் நாடு—நல்ல
பல்விதமாயின சாத்திரத்தின்—மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ் நாடு. 3

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென்றோர்—மணி
யாரம் படைத்த தமிழ் நாடு. 4

—பாரதியார்

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| கல்வி | மூச்சு | செழி | பார் |
| தேன் | காவிரி | யாறு | மணம் |
| பாயுது | பாலாறு | மேவிய | சாத்திரம் |
| இன்பம் | வையை | படைத்த | பொருனை |
| செந்தமிழ் | மணியாரம் | திருமேனி | சிலப்பதிகாரம் |
| வான்புகழ் | அள்ளும் | நெஞ்சு | தென்பெண்ணை |

கேள்விகள்

1. தமிழ் நாட்டில் பாயும் நதிகள் யாவை?
2. தமிழ் நாட்டின் வட எல்லை எது? தெற்கு எல்லை எது?
3. தமிழ் நாட்டின் புகழுக்குக் காரணமான புலவர்கள் யாவர்? அவர்கள் இயற்றிய நூல்கள் யாவை?

# 14. பாரியின் கொடை

முன்னொரு காலத்தில் தமிழ் நாட்டில் பாரி என்ற சிற்றரசன் ஒருவன் இருந்தான். அவன் ஆண்ட நாட்டின் பெயர் பறம்புநாடு. அது மலை வளம் நிரம்பியது. இயற்கையிலேயே பல உணவுப் பொருள்கள் அந்நாட்டில் விளைந்தன.



பாரி நற்குணங்கள் நிரம்பப் பெற்றவன். அவனிடம் சென்று, யார் எது கேட்டாலும் அவன் உடனே கொடுத்து விடுவான். புலவர்களெல்லோரும் பாரியைத் தேடிச் சென்று பல பரிசுகளைப் பெற்றுச் செல்வது வழக்கம்.

யாரேனும் துன்புறுவதைக் கண்டால் பாரி மிகவும் வருத்தமடைவான். அவர்களது துன்பத்தைப் போக்க என்ன வேண்டுமாயினும் கொடுப்பான்.

ஒரு நாள் பாரி தனது தேரில் ஏறி, நாட்டு வளங்களைக் காணச் சென்றான். அங்கே பல காட்சி

களைக் கண்டு மகிழ்ந்தான். ஓரிடத்தில் முல்லைக் கொடி ஒன்றைப் பார்த்தான். அது நன்றாகச் செழித்து வளர்ந்திருந்தது. ஆயினும், மேல் நோக்கிப் படர்வதற்கு ஆதரவு இல்லாமல் தத்தளித்துக் கொண்டிருந்தது.

முல்லைக் கொடி படும் துன்பத்தைக் கண்ட பாரிக்கு அதன்மீது இரக்கம் உண்டாயிற்று. உடனே தன் தேரை அதன் பக்கத்தில் நிறுத்தினான். முல்லைக் கொடி, தேரைப் பற்றிக்கொண்டு வளர வசதி செய்தான். விரைவிலேயே அது தேரைச் சுற்றிக் கொண்டது. அது கண்ட பாரி மகிழ்ச்சி யடைந்தான்; தேரை அங்கேயே நிறுத்தி விட்டு அரண்மனை சேர்ந்தான். அற்ப உயிராகிய முல்லைக் கொடிக்காகப் பாரி தனது தேரையே நிறுத்தி வைத்தான். அவனது கருணையையும் கொடையின் தன்மையையும் என்ன வென்று புகழ்வது!

### புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| மலை | கருணை | படும் | கொடை | வசதி |
| பரிசு | தன்மை | குணம் | வழக்கம் | இரக்கம் |
| வளம் | ஆதரவு | துன்பம் | இயற்கை | விளைந்தன |
| அற்ப | போக்க | ஆயினும் | துன்புறு | நிரம்பியது |
| பறம்பு | புகழ் | அரண்மனை | விரைவில் | முல்லை |

### கேள்விகள்

1. பாரி எந்த நாட்டின் சிற்றரசன்?
2. பாரியின் குணம் எப்படிப் பட்டது?
3. முல்லைக் கொடி ஏன் தத்தளித்துக் கொண்டிருந்தது?
4. பாரி முல்லைக் கொடிக்கு இரங்கி என்ன செய்தான்?

பயிற்சி

(1) எதிரான பொருளுள்ள சொற்களை எழுது:—
முன்; இரங்கி; உண்டு; துன்பம்; செய்யாது,

(2) பின் வரும் பெயர்ச் சொற்களில் ஒருமை எது, பன்மை எது என்று பிரித்துக் கூறு:—
மலைகள்; நாடு; புலவர்கள்; காட்சிகள்; முல்லைக்கொடி; தேர்.

(3) பின் வரும் வாக்கியத்தில் உள்ள பெயர்ச் சொற்களை எழுதி ஒருமையா பன்மையா என்று கூறு:—
தமிழ் நாட்டிலிருந்த சிற்றரசர்களில் மிகச் சிறந்தவன் பாரி; அவன் பல புலவர்களையும் ஆதரித்தான்.

## 15. பருத்திச் செடி

நமது உடைகளில், சில பஞ்சினுலும் சில பட்டினுலும் சில கம்பிளியினுலும் செய்யப்பட்டவை. இவைகளில் பஞ்சினுல் செய்யப்பட்டவைதான் அதிகம். பருத்திச் செடியிலிருந்து பஞ்சு கிடைக்கிறது.

பருத்தி வெப்பமான இடங்களில்தான் ஏராளமாய் உண்டாகும். பருத்தியில் அநேக வகைகள் உண்டு. பருத்திச் செடி கரிசல் நிலத்தில்தான் செழித்துவளரும்; நல்ல பலனையும் கொடுக்கும். கரிசல் நிலத்தைக் கோடைக் காலத்தில் நன்ருய் உழுது புழுதியாக்க வேண்டும். மழைக் காலத்தில் ஒன்று இரண்டு மழை பெய்ததும் நல்ல பருத்தி விதைகளை எடுத்து, சாணிப் பாலூட்டி விதைக்கவேண்டும். விதைகள் மண்ணுள் மறையும்படி மறுபடியும் உழவேண்டும். சில நாட்



களில் விதை முளைக்கும். பத்து அல்லது பதினைந்து இலைகள் விட்டதும் களையெடுக்க வேண்டும். பின்பு ஓர் அடி உயரம் வளர்ந்ததும் களைக்கொட்டினால் மேல்மண் புரளும்படியும் களைகள் அறும்படியும் கொத்தி விடவேண்டும். மேல் மழை ஒன்று பெய்தால் செடி நன்றாய் வளரும்.

மூன்று மாதங்களில் பூக்கள் தோன்றும். இவை மஞ்சள் நிறமாய்ப் பெரியதாயிருக்கும். சில நாட்களில் பூ இதழ்கள் உதிர்ந்துவிடும். உதிர்ந்த இடத்தில் பிஞ்சுகள் தோன்றும். ஒரு மாதத்திற்குள் இவை காய்களாகி முற்றி, சூரிய வெப்பத்தினால் வெடிக்கும். வெடித்த காய்கள் மூன்று பிரிவுகளாகப் பிரிந்து நிற்கும். அந்தப் பிரிவுக்குள் பருத்தி நிறைந்திருக்கும். இப்படி முன்னும் பின்னுமாக மூன்று மாதம் வரை பருத்தி வெடிக்கும். விவசாயிகள் ஆணும் பெண்ணுமாகப் போய் ஒரு நாள் விட்டு ஒரு நாள் பருத்தியைச் சேகரிப்பார்கள். ஒரு காயில் வெடிக்கும் பருத்தி ஒரு 'சுளை' என்று சொல்லப்படும். இந்தச் சுளையைப் பிரித்துப் பார்த்தால் அதனுள்ளே இரண்டு மூன்று விதைகளிருக்கும்.

இப்படிச் சேகரித்த பருத்தியை அதற்கென்று ஏற்பட்ட மனைகளில் வைத்துச் சுற்றினால் பருத்தியிலுள்ள பஞ்சு வேறு, விதை வேறாகப் பிரிந்துவிடும். பஞ்சை, ராட்டைகளிலும் எந்திரங்களிலும் வைத்து நூலாக நூற்று நெசவு செய்து துணியாகச் செய்கிறார்கள். விதையை மாட்டிற்கு நல்ல உணவாகக் கொடுக்கலாம். விதைகளை விதைப்பதற்



காகவும் சேகரித்து வைக்கலாம். பருத்தி விதையி லிருந்து ஒருவித எண்ணெய் எடுப்பதும் உண்டு.

பருத்திச் செடி ஒரு ஆண்டிற்கு மேல் நல்ல பலனைக் கொடுக்காது. ஆகையால் விவசாயிகள் காற்றுக்காலம் வந்ததும் பருத்திச் செடியைப் பிடுங்கி விடுவார்கள். பிடுங்கின செடிகளை மறைவு தட்டிகள் பின்னவும், காய்ந்தபின் அடுப்பெரிக்கவும் சில இடங் களில் கூரை வேயவும் பயன்படுத்துகிருர்கள்.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| பட்டு | களை | கரிசல் | சுளை |
| சாணி | இதழ் | கம்பளி | மணை |
| நெசவு | தட்டிகள் | வேய | பலன் |
| சேகரி | பிஞ்சு | பிரிவாக | மறைவு |
| வெடிக்கும் | அடுப்பு | ராட்டை | உழுது |
| உதிர்ந்து | புரளும்படி | எந்திரம் | விவசாயி |
| ஏராளமாய் | தகுந்தது | பிடுங்கு | அளித்து |
| காற்றுக்காலம் | பதினைந்து | பருத்தி | பின்னவும் |

கேள்விகள்

1. பருத்தி எந்த இடத்தில் செழிப்பாக வளரும் ?
2. பருத்தி பயிரிடுவதற்கு நிலத்தை எப்படித் தயார் செய்ய வேண்டும் ?
3. பருத்திச் செடி பயிரிடுவதைப் பற்றி மூற்று வாக்கியங் கள் எழுது.

பயிற்சி

(1) கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களை அமை:—
1. பருத்தி——நாடுகளில்தான் அதிகமாய் உண்டாகும். (வெப்ப, குளிர்)
2. பருத்தி——நிலத்தில்தான் செழித்து வளரும். (மணல், கரிசல்)
3. ஒரு பருத்திக்காயில் உள்ள பருத்திக்கு——என்று பெயர். (பொதி, சுளை)

(2) பின் வரும் சொற்களைத் தகுந்தபடி மாற்றி வாக்கியங்களாக அமை:—

1. கிடைக்கக் கூடியது ஆடை பருத்தி எளிதில் ஏழை களுக்கு.
2. விடுவார்கள் வந்ததும் பருத்தியை காற்றுக் காலம் பிடுங்கி.

## 16. காந்தியடிகளின் இயல்பு

மகாத்மா காந்தியை நம் நாட்டின் பிதா என்று சொல்லுகிறோம். ஏனெனில் அவரே நாம் சுதந்திரம் பெறுவதற்கு வழிகாட்டியாக இருந்தார். அவரிடம் இரண்டு சிறந்த குணங்களிருந்தன. பிறரைத் துன் புறுத்தாமை, உண்மை ஆகிய இரண்டுமே அந்தக் குணங்களாகும்.

இந்தியரிடையே சிலர் தீண்டாதார் என்று ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தார்கள். இந்த நிலைமை ஒழிய வேண்டுமென்று காந்தியடிகள் எடுத்துக் காட் டினார். தம் வாழ்க்கையில் அவர் யாரையும் தீண்டா தார் என்று ஒதுக்கி வைத்ததில்லை. அவர்களை 'ஹரி சனங்கள்' என்று போற்றினார்.

ஒரு கிராமத்தில் காந்தியடிகள் ஒரு கூட்டத்தில் பேச ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்தக் கூட்டத் திற்கு பல ஹரிசனங்களும் வந்திருந்தார்கள். பிற சாதியார் அவர்களைத் தூரத்தில் உட்காரச் செய்த னர். காந்தியடிகள் கூட்டத்திற்கு வந்து பேசத் தொடங்குமுன், ஒரு தடவை கூட்டத்தைப் பார்த் தார். தூரத்தில் உட்கார்ந்திருந்த ஹரிசனங்களைக் கண்டார்.

உடனே காந்தியடிகள் அக்கூட்டத்திற்கு ஏற் பாடு செய்த ஒருவரை அழைத்து, அந்த மக்கள்

ஒதுங்கி உட்கார்ந்திருப்பதற்குக் காரணம் கேட்டார். கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தவர், "மகாத்மா! அவர்கள் சேரி மக்கள்," என்று பதிலளித்தார்.

காந்தியடிகள், "அந்த ஹரிசனங்கள் உங்களுடன் உட்கார முடியாதென்ருல், நான் அவர்களிடம் சென்று அங்கேயிருந்து பேசப்போகிறேன்," என்று



சொன்னுர். உடனே மேடையிலிருந்து இறங்கி, சேரி மக்கள் இருந்த இடத்திற்குச் சென்ருர். கூட்டத்திலிருந்த பலரும் காந்தியடிகளைப் பின்பற்றி ஹரிசனங்களுடன் சேர்ந்துகொண்டார்கள். "மகாத்மாஜிக்கு ஜே!" என்று எல்லோரும் ஆரவாரம் செய்தார்கள்.

சொல்வதொன்று செய்வது வேருென்று என்பதே காந்தியடிகளிடம் இல்லை. பிறருக்குச் சொல்வதைக் காந்தியடிகள் எப்பொழுதும் தாமே கடைப்

பிடித்தார். தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்று அவர் கூறியதை நாளடைவில் எல்லா இந்தியர்களும் ஒப்புக்கொண்டார்கள். இப்பொழுது நம் நாட்டில் தீண்டாமை பெரும்பாலும் ஒழிக்கப்பட்டு விட்டது.

### புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| சேரி | மேடை | சாதியார் | நாளடைவில் |
| பிதா | ஒதுக்கி | ஆரவாரம் | ஹரிசனங்கள் |
| ஒழிய | ஏற்பாடு | கடைப்பிடி | தீண்டாதார் |
| இயல்பு | நிலைமை | வழிகாட்டி | எடுத்துக்காட்டு |
| ஒதுங்கி | பின்பற்று | வாழ்க்கை | துன்புறுத்து |

### கேள்விகள்

1. காந்தியடிகளை நாம் ஏன் 'நாட்டின் பிதா' என்று சொல்கிறோம் ?
2. கூட்டத்திற்கு வந்த ஹரிசனங்கள் ஏன் ஒதுங்கி உட்கார்ந்தனர் ?
3. கூட்டத்திற்கு வந்தவுடன் காந்திஜி என்ன செய்தார் ?
4. காந்திஜிக்கு ஹரிசனங்களிடமிருந்த அன்பு எப்படி வெளிப்பட்டது ?

### பயிற்சி

(1) பின் வரும் சொற்களில் எது பெயர்ச் சொல், எது வினைச் சொல் என்று கூறு; ஒவ்வொன்றும் என்ன எண் என்பதையும் சொல்லு:—

கூட்டம், மக்கள், இருந்தன, மரங்கள், அது, அவை, நின்றது.

(2) கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைச் சேர்த்து எழுது:—

1. காந்திஜியிடம் இருந்த இரு குணங்கள்———.
2. பிறருக்குச் சொல்லியபடியே காந்தியடிகள் தாமும்———.

# 17. இரண்டு நண்பர்களும் கரடியும்

ஓர் ஊரில் இரண்டு நண்பர்கள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுள் ஒருவன் பெயர் சுப்பன். மற்ருெருவன் பெயர் கந்தசாமி. அவ்விருவரும் வேறு ஒரு ஊருக்குப் போக எண்ணிப் புறப்பட்டனர். வழியில் மரஞ்செடிகள் அடர்ந்த காட்டைக் கடந்து செல்ல நேர்ந்தது. அங்கே புலி, கரடி முதலிய கொடிய விலங்குகள் இருந்தன.



காட்டின் வழியே சென்று கொண்டிருக்கும் போது, சுப்பன் கந்தசாமியைப் பார்த்து, "நண்பா! எனது நண்பர்களுக்கு ஆபத்து வரும்பொழுது நான் அவர்களைக் கைவிடமாட்டேன்," என்று தற்புகழ்ச்சியாகப் பேசிக்கொண்டு போனுன்.

இப்படிப் போகும்போது அருகிலிருந்த ஒரு புதரிலிருந்து ஒரு கரடி உறுமும் சத்தம் கேட்டது.

சுப்பன் பக்கத்திலிருந்த மரத்தில் விரைவாக ஏறி ஒளிந்து கொண்டான். கந்தசாமிக்கு மரமேறத் தெரியாது. அவன் தைரியமாகக் கீழே படுத்துக் கொண்டு பிணம்போலக் கிடந்தான்.

புதரிலிருந்து கரடி வெளியே வந்தது. கந்த சாமியிடம் சென்று அவனை மோந்து பார்த்தது. பிறகு புரட்டிப் பார்த்தது. கரடி பிணத்தைத் தின்னாது என்பது கந்தசாமிக்குத் தெரியும். மூச்சை அடக்கிக் கொண்டான்; கரடி அவனைப் பிணமென்று நினைத்துப் போய்விட்டது.

சுப்பன் மரத்திலிருந்தே இதைப் பார்த்துக் கொண்டிருந்தான். கரடி சென்ற பிறகு அவன் கீழே இறங்கினான். கந்தசாமியிடம் வந்தான். "நண்பனே! இப்பொழுது கரடி உன்னிடம் வந்து ஏதோ இரகசியம் சொல்லிவிட்டுப் போயிற்றே; அதை என்னிடம் சொல்லலாகாதா?" எனக் கேட்டான்.

அதற்குக் கந்தசாமி சுப்பனைப் பார்த்து, "கரடி என் காதருகே வந்து, 'ஆபத்தில் உதவி செய்யாதவனோடு நட்புக்கொள்ளாதே' என்று சொல்லிப் போயிற்று," என்றான். சுப்பன் முன்பு தன்னைத் தானே புகழ்ந்து பேசிக் கொண்டதனால், இதைக் கேட்டு வெட்கமடைந்தான்.

புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| புதர் | ஆகாதா | அடக்கி | பிணம் | மாட்டேன் |
| மோந்து | அடர்ந்து | கொடிய | கடந்து | நேர்ந்தது |
| ஆபத்து | வெட்கம் | நட்பு | புரட்டி | கிடந்தான் |
| இரகசியம் | தைரியம் | அருகே | கரடி | தற்புகழ்ச்சி |

### கேள்விகள்

1. சுப்பன் தற்புகழ்ச்சியாக என்ன சொன்னன் ?
2. கரடியைக் கண்டதும் கந்தசாமி என்ன செய்தான் ?
3. கரடி சொல்லிச் சென்ற இரகசியம் என்ன ?
4. இக்கதையால் நீ தெரிந்துகொண்ட நீதியைக் கூறு.

### பயிற்சி

(1) பின் வரும் வாக்கியங்களில் சில சொற்களில் உள்ள எழுத்துப் பிழைகளைத் திருத்தி எழுது:—

1. ஓர் ஊரில் இறண்டு நண்பர்கள் வசித்தார்கள்.
2. புதரில் இருந்த கறடி உறுமியது.
3. கறடி பிணத்தைத் திண்ணது.

(2) பின் வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்ச்சொற்களை மட்டும் கூறு :—

1. அக் காட்டில் சிங்கம், புலி, கரடி முதலிய கொடிய விலங்குகள் வசித்து வந்தன.
2. கந்தசாமி சுப்பனைப் பார்த்துப் பேசினன்.

## 18. எடிஸன்

தாமஸ் ஆல்வா எடிஸன், நாம் பயன்படுத்தும் பல வாழ்க்கைச் சாதனங்களைப் புதிதாக அமைத்தவர். மின்சார விளக்கையும் கிராமபோனையும் கண்டுபிடித்தவர் அவரே. அவர் அமெரிக்காவில் போர்ட் ஹியுரான் என்ற ஊரில் பிறந்து வளர்ந்தவர். ஆராய்ச்சிகள் செய்து புதிய பல செய்திகளைக் கண்டுபிடிப்பதில் சிறுவயதிலேயே அவருக்கு ஆர்வம் மிகுந்திருந்தது. எத்தனை இடையூறுகள் ஏற்பட்டாலும் அவர் மனந்தளராமல் மேன்மேலும் முயன்று வந்தார்.

அவருக்குப் பதினைந்து வயதாயிருந்த பொழுது, அவர் டெட்ராயிடு என்ற நகருக்கு இரயில் வண்டியில் நாள்தோறும் செல்வார்; அங்கே மலிவாகக்

காய் கறிகள் வாங்கிவந்து போர்ட் ஹியுரானில் விற்பார். இரயில் வண்டிப் பயணம் சில மணி நேரம் பிடித்தது. இந்த நேரத்தை வீணுக்க அவர் விரும்ப வில்லை.

எடிஸன் ஒரு சிறு பழைய அச்சு எந்திரத்தை விலைக்கு வாங்கி, இரயில் வண்டிப் பெட்டியிலேயே அமைத்துக் கொண்டார். அதன் உதவியால் வீக்லி ஹெரால்டு என்ற ஒரு செய்தித்தாளைத் தாமே அச்சடித்து விற்கத் தொடங்கினுர். உள்ளூர்ச் செய்திகளைத் திரட்டுவது, அச்சுக் கோப்பது, அச்சடிப்பது,



பத்திரிகையை விற்பது ஆகிய எல்லா வேலைகளையும் அவரே செய்தார்.

இரசாயன பரிசோதனைகள் செய்வதில் அந்த வயதிலேயே அவருக்கு அளவில்லாத விருப்பம் இருந்தது. இரயில் வண்டியிலே பரிசோதனைகளுக்கு வேண்டிய பொருள்களை வாங்கிப் புட்டிகளில் வைத்திருந்தார். ஒரு நாள், காற்றுப் பட்டால் எரியக் கூடிய பாஸ்வரம் என்ற பொருள் தவறிக் கீழே விழுந்து எரியத் தொடங்கியது. சில மரச் சாமான்கள் தீப்பற்றிக் கொண்டன. இரயில் அதிகாரிகள் வண்டியை நிறுத்தினுர்கள். சிலர் ஓடிவந்து நீரைக் கொட்டித் தீயை அணைத்தார்கள். ஓர் அதிகாரி எடிஸனுடைய காய்கறிக் கூடைகள், அச்சு எந்

திரம், பரிசோதனைப் பொருள்கள் எல்லாவற்றையும் தூக்கி வெளியே எறிந்தார். எடிஸனையும் இழுத்து வெளியே தள்ளி, கன்னத்தில் பளீர் என்று ஓர் அறை வைத்தார். பிறகு இரயில் வண்டி சென்று விட்டது.

வழியில் விடப்பட்ட எடிஸன் வருந்தினுர்; நடந்தே சென்று தம் ஊரை அடைந்தார். ஆயினும் இந்த இடையூறு எற்பட்டதால் அவர் தம் ஆராய்ச்சி களை விட்டொழித்தாரா? இல்லை. தம் வீட்டிலேயே இந்தப் பரிசோதனைகளைச் செய்து பார்க்க வசதி களைச் செய்து கொண்டார். மேன்மேலும் உழைத்து, உலகப் பெரு விஞ்ஞானிகளில் ஒருவர் ஆனுர்.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| நகருக்கு | கோப்பது | மலிவாக | புட்டி |
| சாதனம் | தளராமல் | விட்டொழி | பளீர் |
| மின்சாரம் | கன்னம் | விஞ்ஞானி | திரட்டு |
| கிராமபோன் | இரசாயனம் | இடையூறு | பயணம் |
| ஆராய்ச்சி | பாஸ்வரம் | பரிசோதனை | கண்டுபிடி |
| தொழில் | செய்தித்தாள் | தீயணைத்து | தீப்பற்றி |

கேள்விகள்

1. எடிஸன் கண்டுபிடித்த இரண்டு கருவிகளைக் கூறு.
2. டெட்ராயிடு நகருக்கு எடிஸன் ஏன் நாள் தோறும் சென்று வந்தார்?
3. எந்த வயதில் எடிஸன் செய்தித்தாளை அச்சடித்தார்?
4. அவரிருந்த வண்டிப் பெட்டியில் ஏன் தீப்பிடித்தது?
5. அதிகாரிகள் எடிஸனை எப்படித் தண்டித்தார்கள்?
6. சிறு வயதிலேயே எடிஸனிடம் காணப்பட்ட குணங்கள் என்ன?

பயிற்சி

(1) வினைச் சொற்கள் என்ருல் என்ன என்பது உங்களுக்குத் தெரியும். ஒரு வாக்கியத்தில் பேசப்படும் பொருளோ அல்லது

பேசப்படுபவரோ செய்யும் தொழிலை வினைச் சொல் குறிக்கிறது. இந்தத் தொழிலுக்குக் காலம் உண்டு. சென்ற காலத்தில் நடந்த தொழிலானல், அந்த வினைச்சொல் இறந்த காலம் எனப்படும். இப்பொழுது நடக்கும் தொழிலானல், வினைச் சொல் நிகழ் காலம் எனப்படும். வருங்காலத்தில் நடக்கப் போகும் தொழிலானல், வினைச் சொல் எதிர் காலம் எனப்படும்.

(உ-ம்) நான் சென்றேன். (இறந்த காலம்)
அவன் படித்தான். ,,
நான் செல்கிறேன். (நிகழ் காலம்)
அவன் படிக்கிருன். ,,
நாங்கள் செல்வோம் (எதிர் காலம்)
அவர்கள் படிப்பார்கள். ,,

(1) கீழேயுள்ள வாக்கியங்களில் வினைச் சொற்களின் காலத்தைக் கூறு:—
எடிஸன் பரிசோதனைகள் செய்தார்.
எடிஸன் வருந்தினர்.
நீங்கள் படிக்கிறீர்கள்.
பெண்கள் கோலம் போட்டார்கள்.
மாணவர்கள் கூடுவார்கள்.
நீ ஏன் பேசுகிருய் ?

## 19. அதிவீரராமர்

சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலியிலுள்ள கொற்கை நகரில் அதிவீரராமர் என்ற பாண்டிய அரசர் ஆண்டுவந்தார். அவருக்கு வரதுங்க பாண்டியர் என்ற தமையனர் இருந்தார். அவர் திருக்கருவை என்னும் நகரில் செங்கோல் செலுத்தி வந்தார். இவர்களிருவரும் மதுரையில் ஆண்ட பாண்டியர்களுக்கு அடங்கியவர்களே.

அதிவீரராமரும் வரதுங்கரும் தமிழ், வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்லவர்கள். கவி பாடுவதில் தேர்ந்தவர்கள். வரதுங்க பாண்டியர் சிவபெருமானிடத்தில் மிகுந்த அன்பு கொண்டவர்.

அவர் பாடிய பாடல்களெல்லாம் சிவபெருமானைப் போற்றுவனவே. வரதுங்கரின் மனைவியாரும் தமிழில் வல்லவரே. ஆனால் அதிவீரராமரோ உலக வாழ்க்கை இன்பங்களில் ஈடுபட்டு, அவற்றைப் பற்றியே பாடிவந்தார்.

ஒரு சமயம் அதிவீரராமர் தமிழில் நைடதம் என்னும் நூலைப் பாடத் தொடங்கினர். நைடதம் நளன் என்ற அரசனுடைய கதையைக் கூறும் நூல். அதில் அதிவீரராமர் உலக இன்பங்களைப் பற்றிச் சிறப்பாகப் பாடினர். இவ்வாறு பாதி நூல் முடிந்ததும் பாடல்களைத் தமையனரிடம் காண்பித்தார். அவைகளைப் பார்த்த வரதுங்கர், "தம்பி! எம்பெருமானைத் துதியாது மனிதனைப் புகழ்ந்து, இவ்வுலக இன்பத்தைப் பற்றியே பாடியுள்ளாயே," என்று கூறி வருந்தினர்.

இதைக் கேட்டதும் அதிவீரராமரது உற்சாகம் குறைந்துவிட்டது. இருந்தபோதிலும் எடுத்த காரியத்தை முடிக்கவேண்டும் என்று எண்ணி, ஒருவாறு அந்நூலைப் பாடி முடித்தார். முடிந்ததும் தமது அவைப் புலவர்களிடம் காட்டினர். அவர்கள் அவருடைய நூல் "கரும்பின் இனிப்பைப்போல் சிறந்து விளங்குகின்றது," என்றனர். பிறகு அதிவீரராமர் தமது நைடதத்தைத் தமையனரது மனைவியிடம் காட்டினர். அந்த அம்மையார் அதைப் பார்த்து, "வேட்டை நாய் காட்டிற்குச் செல்லும்போது ஊக்கத்துடன் சென்று, திரும்பிவரும்போது சோர்ந்து வருவதுபோல் இருக்கிறது," என்று கூறினர்.

அதிவீரராமர் இதைக் கேட்டுப் பெருங் கோபங் கொண்டார். உடனே தம் ஊர் சென்று படைகளைத்

திரட்டி, தமையனுரோடு சண்டை செய்யப் புறப்பட்டார். தம்பி படையெடுத்து வந்ததைக் கேட்ட வரதுங்கர், ஓர் ஓலையில் "ஆருயிர்த் தம்பி! கர்ணன், இராவணன், அர்ச்சுனன் இவர்களைப் போல் நீ இராதே. ஆனுல், ராமனையும் பரதனையும் போல் இரு," என்னும் பொருளுள்ள ஒரு பாட்டை எழுதி யனுப்பினுர்.

இந்தப் பாட்டைப் பார்த்த அதிவீரராமர் மனம் வருந்தித் தமது தவற்றை உணர்ந்தார். உடனே படைகளைத் திருப்பி யனுப்பிவிட்டுத் தமையனுரிடம் சென்று அவரை வணங்கினுர். அப்போது வரதுங்கர், "தம்பி! உனது அவைப் புலவர்கள் கூறியதையே உன் அண்ணியும் கூறினுள். ஆனுல் பாடல்கள் சிறந்தவைகளே. ஆகையால் நீ மனம் வருந்த வேண்டாம்," என்ருர்.

உடனே அதிவீரராமர் மகிழ்ந்து, நறுந்தொகை என்னும் வெற்றிவேற்கை பாடினுர். அதிவீரராமரைப் பிள்ளைப் பாண்டியன் என்றும் தமிழ் வளர்த்த தென்னவன் என்றும் சொல்வதுண்டு.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| பாதி | வல்லவர் | கரும்பு | சிறப்பாக |
| முடிக்க | வேட்டை | குறைந்து | சோர்ந்து |
| விரதம் | ஈடுபட்டு | துதியாது | தமையனுர் |
| ஆருயிர் | அண்ணி | உற்சாகம் | செங்கோல் |
| இனிப்பு | விமரிசை | பெருமான் | அம்மையார் |
| படையெடு | படைகள் | தென்னவன் | தவற்றை |

கேள்விகள்

1. அதிவீரராம பாண்டியர் என்ன நூல்களை இயற்றினுர்?
2. அவைப் புலவர்கள், நைடதம் எப்படி இருந்ததாகச் சொன்னுர்கள் ?

3. அதிவீரராமரின் அண்ணி நைடதத்தை எதற்கு ஒப்பிட்டாள் ?
4. அதிவீரராமர் தம் தமையனுர்மீது படையெடுத்த பொழுது, அவர் கூறிய அறிவுரை யாது ?

பயிற்சி

(1) பின்வரும் சொற்களை வாக்கியங்களில் அமை:—
வருந்தினன், திரட்டி, திரும்பி, சிறந்தவை.

(2) தகுந்த இடங்களில் முற்றுப்புள்ளி வைத்துப் பிரி:—
அதிவீரராமர் இதைக் கேட்டுக் கோபங்கொண்டார் உடனே தம் படைகளைத் திரட்டினுர் தமையனுருடன் போர் செய்யச் சென்ருர்

## 20. அம்மை குத்துவது ஏன்?

**தகப்பனுர் :**—குழந்தாய்! நீ ஏன் ஓடி வருகிருய்? இப்பொழுதுதானே பள்ளிக்கூடம் போனுய்; அதற்குள் ஏன் திரும்பி விட்டாய்?

**சீனு:**—அப்பா! எங்கள் பள்ளிக்கூடம் நமது கிராமச் சாவடியில்தானே இருக்கிறது. அங்கே அம்மைகுத்துகிறவர் வந்திருக்கிருர்; அதனுல்தான் ஓடி வந்து விட்டேன். அப்பா! வைசூரி என்ருல் என்ன ? அதற்காக ஏன் அம்மை குத்த வேண்டும் ?

**தகப்:**— குழந்தாய்! வைசூரி அல்லது பெரிய அம்மை என்பது ஒரு கொடிய நோய். இந்நோய் வந்தால் முதலில் மூன்று நாட்களுக்கு விடாது சுரம் கண்டு, பின்பு அம்மை முத்துக்கள் உடம்பு முழுவதும் காணும். இம் முத்துக்கள் நாளடைவில் பெரிதாகிப் பிறகு வாடும். வாடியபின் முத்துக்கள் இருந்த இடத்தில் குழிவிழுந்து, உடலின் அழகைக் கெடுத்து விடும். சிலருக்குக் கண் குருடாகி விடும்; காது செவிடாகிவிடும்; அல்லது கால்,

கை நொண்டியாகிவிடும். ஆகையால் இதனிடத்தில் மக்களுக்குப் பயம் அதிகம். வைசூரி நோய் வராமலிருப்பதற்குத்தான் அம்மை குத்துகிறார்கள்.

சீனு:— அம்மை குத்தும்போது பால்போல் வெள்ளையாய் இருக்கும் ஒரு திரவத்தைக் கையில் வைக்கிறார்களே, அது என்ன ?

தகப்:—குழந்தாய்! அதுதான் அம்மைப்பால். அம்மை கொப்புளித்துத் தழும்பு ஏறினால்தான் வைசூரி வராமல் தடுக்க நமது உடம்பில் சக்தி உண்டாகும். அவ்வாறு கொப்புளிப்பதற்கு அம்மைப் பால் வேண்டும்.

சீனு:—அம்மைப் பாலை எப்படித் தயார் செய்கிறார்கள் ?

தகப்:— குழந்தாய்! கன்றுக்குட்டியின் அடிவயிற்றில் அம்மைக் கொப்புளங்கள் உண்டாக்கி, அதிலிருந்து பாலை எடுத்துக் கெடாமல் புட்டிகளில் வைத்து மூடி அயலூர்களுக்கு அனுப்புவார்கள். அம்மை குத்தும் முறையை முதலில் கண்டுபிடித்தவர் டாக்டர் ஜென்னர் துரை.

சீனு:— அடுத்த வீட்டுக் குழந்தை வைசூரி கண்டிருந்தபொழுது வாசலில் வேப்பிலை கட்டித் தொங்கவிட்டிருந்தார்களே, ஏன் ?

தகப்:—குழந்தாய்! வைசூரி ஒரு தொற்று நோய். ஒருவரிடத்திலிருந்து மற்றவர்களுக்குப் பரவும். ஆகையால் வைசூரி கண்டவர்களிடம் எல்லோரும் செல்லக் கூடாது. அதற்காகவே வைசூரி அந்த வீட்டில் கண்டிருக்கிறது என்பதற்கு அடையாளமாக வேப்பிலைக் கொத்தைத் தொங்க விடு

கிருர்கள். அம்மை குத்திக் கொண்டவர்களே அந்த வீட்டுக்குள் போகலாம். ஏனெனில் அம்மை குத்திக் கொண்டவர்களுக்கு வைசூரி வராது. வந்தாலும் மிகவும் எளிதாகப் போய்விடும். ஆகையால் அம்மை குத்திக்கொள்ள வேண்டியது அவசியம்.

### புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| முத்து | செவிடு | அயலூர் | சுரம் |
| வாடிய | திரவம் | விடாது | டாக்டர் |
| குழி | தடுக்க | தழும்பு | அவசியம் |
| குத்து | கெடுத்து | வைசூரி | எளிதாக |
| குருடு | ஒருதரம் | தொற்று | அடையாளம் |
| கன்று | உண்டாக்கி | நொண்டி | கொப்புளித்து |

### கேள்விகள்

1. அம்மை குத்தும் முறையைக் கண்டுபிடித்தவர் யார் ?
2. தொற்று நோய் என்ருல் என்ன ?
3. வைசூரியைப்பற்றி தெரிந்ததைக் கூறு.
4. அம்மை குத்துவதால் என்ன பயன் ?

### பயிற்சி

(1) பின் வரும் வாக்கியங்களில் சொற்கள் முறைமாறி இருப்பதைச் சரிப்படுத்தி எழுது :—

1. என்ன என்ருல் வைசூரி ?
2. செல்லக்கூடாது கண்டவர்களிடம் வைசூரி எல்லோரும்.
3. குத்திக் கொள்ள வேண்டும் ஏழு வருடத்துக்கு அம்மை ஒவ்வொருவரும் ஒரு தரம்.

(2) பின் வரும் வாக்கியங்களில் வினைச்சொற்களுக்குப் பொருத்தமான பெயர்ச் சொற்களைச் சேர்த்துப் படி :—

1. ——வீட்டுக்குப் போகிருேம்.
2. ——உணவு புசிக்கிறீர்கள்.
3. ——பந்து விளையாடுகிருன்.
4. ——சண்டை யிடுகின்றன.

(3) பின் வரும் வினைச் சொற்களின் காலங்கள் என்ன ?
கண்டுபிடித்தோம்; பார்க்கிருேம்; வருவாய்; செல்கிருர்கள்.

# 21. ஔவை



ஔவைக் கிழவி நம்கிழவி
அமுதின் இனிய சொற்கிழவி
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி.

நெல்லிக் கனியைத் தின்றுலகில்
நீடு வாழும் தமிழ்க் கிழவி
வெல்லற்கரிய மாந்தரெலாம்
வியந்து போற்றும் ஒருகிழவி.

கூழுக்காகக் கவி பாடும்
கூனக்கிழவி அவளுரையை
வாழும் வாழ்வில் ஒருநாளும்
மறவோம் மறவோம் மறவோமே.

—தேசிக விநாயகம் பிள்ளை

புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| அமுது | நீடு | கூனல் | செவ்வை | தெரியக்காட்டு |
| மாந்தர் | நெறி | போற்றும் | வெல்லல் | மறவோம் |

கேள்விகள்

1. ஔவையாரின் சொற்கள் நமக்கு என்ன காட்டுகின்றன ?
2. ஔவையார் உலகில் நெடுங்காலம் வாழக் காரணம் என்ன ?
3. ஔவையார் எதற்காகவும் கவி பாடுவார் ?

# 22. அரசனும் கிழவனும்

முன் காலத்தில் தமிழ் நாட்டின் ஒரு சிறு பகுதியைச் சிற்றரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவன் வாலிபன்; ஆயினும் தான் ஒரு சிறந்த அறிவாளி என்று எண்ணிச் சிறிது கர்வங் கொண்டிருந்தான். ஒருநாள் அவன் குதிரைமீது ஏறிக்கொண்டு, மெய்க் காவலர் பின் தொடர நாட்டுவளங் காணச் சென்றான்.



ஒரு கிராமத்தின் வழியே அரசனும் காவலாளரும் சென்று கொண்டிருந்தார்கள். அங்கு கிழவன் ஒருவன் ஒரு சிறு மாங்கன்றுக்குக் குடத்திலிருந்து தண்ணீர் ஊற்றிக்கொண்டிருந்தான். அவனைப் பார்த்த அரசன் குதிரையை நிறுத்திவிட்டுச் சிரித்தான்; காவலாளரும் சிரித்தனர்.

அரசன் :—பெரியவரே! உமக்கு வயதென்ன ?

கிழவன் :—மகாராஜா! வருகிற தைக்கு எனக்கு எண்பது நிறைகிறது.

அரசன் :—அப்படியா! இந்த மாங்கன்று எப்பொழுது காய்க்கத் தொடங்குமென்று உமக்குத் தெரியுமா ?

கிழவன் :—இது காய்க்க இன்னும் பத்து வருடமாவது ஆகும்: மகாராஜா !

அரசன் :—இது காய்க்கும் பொழுது உமக்கு என்ன வயதாகும் ?

கிழவன் :— அது காய்க்கிறபொழுது நான் எங்கே உயிரோடே இருக்கப்போகிறேன்! இருந்தால் தொண்ணூறு வயதாகும்.

அரசன் :—இது காய்க்கிற பொழுது உயிரோடு இருப்பது நிச்சயமில்லை என்று உமக்குத் தெரிகிறது. அப்படியிருந்தும், இப்பொழுது இதை ஏன் நட்டுத் தண்ணீர் ஊற்றி வளர்க்கிறீர் ?

கிழவன் :—மகாராஜா! நான் தங்களை ஒன்று கேட்கிறேன். கோபங்கொள்ளாமல் பதில் சொல்வீர்களா ?

அரசன் :— இவ்வளவு பெரியவரான உம்மை நான் ஏன் கோபிக்கப் போகிறேன்! என்ன வேண்டுமானாலும் கேளும். பதில் சொல்கிறேன்.

கிழவன் :— அரண்மனைத் தோட்டத்திலுள்ள பழ மரங்களைத் தாங்களே நட்டு வளர்த்தீர்களா ?

அரசன் :— நான் வளர்க்கவில்லை. எனது தந்தையாரும் பாட்டனாரும் நட்டு வளர்த்த மரங்கள் அவை.

கிழவன் :—அந்த மரங்களின் பலனை அனுபவிக்க, இப்பொழுது அவர்கள் இல்லையே! அவற்றை அவர்கள் ஏன் நட்டு வளர்த்தார்கள்?

கிழவன் இப்படிக் கேட்டதும் அரசனுக்கு அறிவு பிறந்துவிட்டது. முதலில் கிழவனேப் பார்த்து ஏளன மாகச் சிரித்ததை எண்ணி வருந்தினுன். பிறகு அரசன் கிழவனேப் பார்த்து, "பெரியவரே! உம் முடைய கருத்தைப் புரிந்து கொண்டேன். நமது முன்ஞேர்கள் நட்டு வளர்த்த மரங்களின் பலன்களே இப்பொழுது நாம் அனுபவிக்கிருேம். ஆகையால், நாம் நமது சந்ததிகளுக்கும் பலன் தரக்கூடிய மரங் களே நட்டு வளர்க்க வேண்டும். இதுவே உம் முடைய கருத்தல்லவா? இதைத் தெரிந்துகொள் ளாமல் நான் முதலில் சிரித்ததற்கு நீங்கள் என்னே மன்னிக்கவேண்டும்," என்று சொல்லிவிட்டுத் தன் அரண்மனே சென்ருன். அன்றுமுதல் அவன் தன் குடிகளுக்கு நன்மை செய்வதிலும், நாடெங்கும் பயன் தரும் மரங்களே வளர்ப்பதிலும் தன் காலத்தைச் செலவிட்டான்.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| சிரி | ஏளனம் | நிச்சயம் | கிழவன் |
| நிறை | குடிகள் | கோபங்கொள் | அனுபவி |
| சந்ததி | பிறந்து | தொண்ணூறு | மகாராஜா |
| கர்வம் | பதில் | புரிந்துகொள் | அறிவாளி |
| செலவிடு | வாலிபன் | மெய்க்காவலர் | இவ்வளவு |
| மன்னிக்க | நாட்டுவளம் | வேண்டுமானுல் | காய்க்க |

கேள்விகள்

1. அரசன் கிழவனேக் கண்டு ஏன் சிரித்தான்?
2. கிழவன் ஏன் மாங்கன்றை நட்டு வளர்த்தான்?
3. அரசன் தன் காலத்தை எப்படிச் செலவிட்டான்?

பயிற்சி

(1) பின் வரும் வாக்கியங்களுக்கு முற்றுப் புள்ளி அமைத்துப் பிரி:—

கிழவன் மாங்கன்றுக்கு நீர் ஊற்றினுன் அவனேப் பார்த்த

அரசன் சிரித்தான் அரசனுடன் சென்ற காவலாளரும் சிரித்தார்கள்

(2) இப்பாடத்தின் முதல் பாராவில் உள்ள பெயர்ச் சொற்களை யும் வினைச் சொற்களையும் எடுத்து எழுது. அவை ஒருமையா, பன்மையா எனக் கூறு.

# 23. இரு கடிதங்கள்

## I

மேல மாசி வீதி,
மதுரை,
17, செப்டம்பர், 1957.

அன்புள்ள சேகர்,

சென்ற வாரத்தில் நீ எங்கள் ஊருக்கு வரப்போவதாகச் சொல்லி வராமலிருந்து விட்டாய். என்னை இப்படி நீ ஏமாற்ற லாமா? என் தாயாரும் தகப்பனரும் நீ வராததற்கு வருந்தினர்கள்.

போனது போகட்டும். இந்த மாதம் 22-ம் தேதி (இன்னும் நான்கு நாட்களே இருக்கின்றன) எனக்குப் பிறந்த நாளாம். என் பெற்றோர் அந்த நாளைச் சிறப்பாகக் கொண்டாடப் போகிறார்களாம். இந்த மாதிரியான கொண்டாட்டங்களில் எனக்கு விருப்பமில்லை. ஆனல் அன்று நல்ல சாப் பாடு கிடைக்கும். நீ தவருமல் அந்தக் கொண்டாட்டத்திற்கு வர வேண்டும். அன்று ஞாயிற்றுக் கிழமையாயிருப்பதால் உனக்கு விடுமுறைதான். 'வேலை இருந் தது, வரமுடியவில்லை,' என்று சொல்லிக் கொள்ள முடியாது.

உன் அன்பன்,
கண்ணன்.

II

மலைக்கோட்டைத் தெரு,
திருச்சி.
19, செப்டம்பர், 1957.

அன்புள்ள கண்ணு,

உன் பிறந்த நாளை நீ கொண்டாடப் போவதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். ஆனல், அதற்கு நான் வர இயலாததைக் குறித்து வருந்துகிறேன். எங்கள் பள்ளியில் இப்பொழுது பரிட்சை நடந்துகொண்டிருக்கிறது. வரவிருக்கும் உன் பிறந்த நாளுக்கு மறுநாள் எனக்குத் தமிழ்ப் பாடப் பரிட்சை. நான் மதுரைக்கு வந்துவிட்டுத் திரும்பிவந்து பரிட்சை எழுதலாம்; ஆனல் பாடங்களைப் படிக்க நேரமிராது.

இன்று உனக்குப் பிறந்தநாள் பரிசாக ஒரு புத்தகம் அனுப்பியிருக்கிறேன். அதைப் பெற்றுக்கொண்டு, நான் வரமுடியாததற்கு என்னை மன்னித்துவிடு.

உன் பிரிய நண்பன்,
சேகர்.

புதுச்சொற்கள்

| | | |
|---|---|---|
| இயலாது | பரிட்சை | மகிழ்ச்சி |
| குறித்து | முடியாதது | அன்புள்ள |
| வரவிரு | போனது | கொண்டாட்டம் |

பயிற்சி

1. உன் வீட்டில் நடக்கவிருக்கும் ஒரு கொண்டாட்டத்திற்காக உன் நண்பனுக்கு ஓர் அழைப்புக் கடிதம் எழுது.
2. உன் ஊர்த் திருவிழா ஒன்றை விவரித்து உன் மாமனுக்கு ஒரு கடிதம் எழுது.

# 24 தேசிங்கு ராஜன்

டில்லியில் அரசாண்ட முகம்மதியப் பேரரசர்களுள் ஷா ஆலம் ஒருவர். அவரிடம் எவர்க்கும் அடங்காக் குதிரை ஒன்று இருந்தது. அது மிகவும் கொடிய குணமுடையது. பின்னுல் போனுல் உதைக்கும்; முன்னுல் வந்தால் கடிக்கும். அதை அடக்கவோ, சவாரி செய்யவோ ஒருவராலும் முடியவில்லை.

சக்கரவர்த்தியும், அந்தக் குதிரையை அடக்கி அதில் சவாரி செய்கிறவனுக்குப் பெரிய பரிசு அளிப்பதாகத் தம் நாடு முழுவதும் விளம்பரம் செய்தார். பல சிற்றரசர்கள் அக்குதிரையை வசப்படுத்த முயன்றனர்; ஆனுல் இயலவில்லை. குதிரையை அடக்க முயன்று பின்னடைந்தவர்கள் எல்லோரும் சிறையில் இடப்பட்டனர். அவர்களில் நம் தென்னுட்டில் உள்ள செஞ்சிக் கோட்டைச் சிற்றரசராகிய தரணிசிங்கும் ஒருவர்.

தரணிசிங்கு அரசர் சிறையிடப்பட்டபொழுது, அவரது மனைவி கருவுற்றிருந்தாள். உரிய காலத்தில் அவளுக்கு ஓர் ஆண் குழந்தையும் பிறந்தது. அவனுக்குத் தேசிங்கு என்று பெயரிட்டனர். அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தான். அவன் தனது தந்தையாரது சிறை வாசத்தைப் பற்றி அறிந்தான். டில்லிச் சக்கரவர்த்தியின் அடங்காக் குதிரையை அடக்கித் தன் தகப்பனுரை மீட்க எண்ணங் கொண்டான்.

தேசிங்கு தன் பள்ளித்தோழன் முகம்மதுகானைக் கூட்டிக்கொண்டு டில்லி சேர்ந்தான்; அடங்காத குதிரையை அடக்குவதற்கு வந்திருப்பதாகச் சக்கரவர்த்தியிடம் தெரிவித்தான். சக்கரவர்த்தியும்

அதற்கு இசைந்தார். குதிரை வெளியே கொண்டு வந்து நிறுத்தப் பட்டது. தேசிங்கு பாய்ந்து எழுந்து அதன் பக்கம் போனுன். குதிரையைத் தட்டிக் கொடுத்து அதன் மேல் குதித்து ஏறினுன். குதிரையும் தாவிப் பாய்ந்தது. தேசிங்கோ அதை மனம் போலப் போக விட்டான். குதிரையும் வெகுதூரம் ஓடிக் களைத்தது.

தேசிங்கோ வெற்றி பெற்ருன். எல்லோரும் அவனைப் புகழ்ந்தனர். ஷா ஆலம் அந்தக் குதிரையை அவனுக்கே கொடுத்தார். தரணிசிங்கு விடுதலையடைந்தார். தரணிசிங்கு ஆண்டுதோறும் சக்கரவர்த்திக்குக் கட்டவேண்டிய கப்பத்தை இனிக் கட்ட வேண்டிய தில்லை என்று உத்தரவு பிறந்தது. டில்லி தளபதி தன் மகளைத் தேசிங்குக்கு மணம் செய்து கொடுத்தான். செஞ்சிக் கோட்டைக்கு எல்லோரும் திரும்பினர்.

சிறிது காலத்தில் தரணிசிங்கு மரணமடைந்தார். தேசிங்கு பட்டத்துக்கு வந்தான். செஞ்சி, செல்வத்திலும் நாகரிகத்திலும் முதன்மை பெற்றது. முகம்மதுகான் தளபதி ஆனுன். அவனுக்குக் கலியாணமும் ஏற்பாடாயிற்று. டில்லி சக்கரவர்த்திக்காக ஆற்காட்டு நவாபு கப்பம் வசூல் செய்தான். அவன் தேசிங்கிடமும் கப்பம் கேட்டனுப்பினுன். இதுகேட்ட தேசிங்கு கடுஞ்சினங் கொண்டான். "என்னைச் சண்டையில் வென்று கப்பம் வாங்கிக் கொள்ளட்டும்," என்று சொல்லி அனுப்பினுன்.

முகம்மதுகானுக்குக் கலியாணம் நடந்துகொண்டிருந்த பொழுது செஞ்சியில் சண்டையும் ஆரம்பித்தது. இதை அறிந்த முகம்மதுகான் கலியாணத்தை

நிறுத்தி விட்டுச் சண்டைக்குச் சென்றான். நவாபின் சேனையைச் சிதைத்துப் புறங்காட்டி ஓடச் செய்தான். எதிர்த்து நிற்பார் ஒருவரும் இல்லை. முகம்மதுகான் கோட்டைக்குத் திரும்பினான். வழியில் பிணக் குவியலின் மறைவிலிருந்து ஒருவன் அவனை ஈட்டியால் குத்திக்கொன்றான். இதையறிந்த ராஜாதேசிங்கு சினங்கொண்டான். சீறி எழுந்தான். போர்க்களத்திற்குச் சென்றான். எஞ்சி நின்ற நவாபின் சேனையையும் கொன்று குவித்தான். முகம்மதுகான் இல்லாமல் உயிர் வாழ அவன் விரும்பவில்லை. தன் வாளை உயர எறிந்தான். தன் மார்பை அதற்கு நேராகக் காண்பித்தான். வாள் அவன் மார்பில் பாய்ந்து, அவன் உயிரை வாங்கியது. தேசிங்கின் மனைவி தீ வளர்த்து அதில் விழுந்து இறந்தாள். அவள் கற்பின் மேன்மைக்கும், தேசிங்கின் வீரத்திற்கும், உயர்ந்த நட்புக்கும் அவர்களை இன்றும் நாம் போற்றுகிறோம்.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| கற்பு | மார்பு | முதன்மை | விளம்பரம் |
| ஈட்டி | சினம் | கருவுற்று | வசப்படுத்த |
| மேனி | சேனை | நாகரிகம் | சிறையிலிட |
| எஞ்சி | சீறி | கோட்டை | இசைந்தார் |
| நவாபு | வெற்றி | பின்னடை | பட்டத்து |
| சவீரி | மரணம் | களைத்தது | புறங்காட்டி |
| தளபதி | பேரரசர் | உதைக்கும் | போர்க்களம் |
| இய்ல | உத்தரவு | வண்ணம் | சக்கரவர்த்தி |

கேள்விகள்

1. தரணிசிங்கு ஏன் சிறையிலிடப்பட்டார்?
2. தேசிங்கு ராஜன் குதிரையை அடக்கினதால் அடைந்த பயன் என்ன?

3. நவாபுக்கும் தேசிங்கு ராஜனுக்கும் நடந்த சண்டைக்குக் காரணம் யாது?
4. முகம்மதுகான் யார்?
5. தேசிங்கு ராஜன் எவ்வாறு மரணம் அடைந்தான்?

பயிற்சி

(1) பின் வரும் சொற்களைத் தகுந்த வாக்கியங்களில் அமை:—
விடுதலை, கப்பம், கொடிய, குதித்து, மீட்க, வெற்றி, சவாரி.

(2) இப் பாடத்தில் வரும் இடங்களின் பெயர்கள், பிராணி களின் பெயர்கள் இவைகளைத் தனித்தனியாக எடுத்து எழுது.

(3) பின் வரும் வாக்கியங்களில் உள்ள பிழைகளைத் திருத்துக:—
1. என் தோட்டத்தில் பத்து மரங்கள் இருந்தது.
2. அவர் எங்கே போனுன்?
3. நான் நேற்றுப் போவேன்.

# 25. நெல் வயல்

**மகன்** :—அப்பா! இன்று நமது வயல் அறு வடையாகும் என்று சொன்னீர்களே, அதைப்போய் பார்க்கலாமா? நம் வயல் இங்கிருந்து எவ்வளவு தூரமிருக்கும்?

**தகப்பனுர்** :—இதோ ஊர் ஓரத்தில்தானிருக் கிறது. நாம் போகலாம் வா.

**மகன்** :—இதுதானே நம் வயல்? ஏன் அப்பா, கதிர்கள் எல்லாம் சாய்ந்து கிடக்கின்றன?

**தகப்பனுர்** :—நெல்மணி முற்றிவிட்டதால் பாரம் தாங்கமாட்டாமல் கதிர் கீழே சாய்ந்துவிட்டது.

**மகன்** :—அப்பா! நெற்கதிர் எப்பொழுதும் இந்த நிறமாகத்தான் இருக்குமோ?

**தகப்பனுர்** :—குழந்தாய்! கதிர் முதலில் பச்சை நிறமாய் இருக்கும். பால் பிடித்ததும் சிறிது வெண் மையாய் இருக்கும். பிறகு கதிர் முற்றினுல் இம்

மாதிரிப் பொன்னிறமாய் இருக்கும். கதிர் பசுமையாய் இருக்கும்போது நிமிர்ந்து நிற்கும். முற்றின பின்தான் இப்படிச் சாய்ந்துவிடும்.

மகன் :—அப்பா! இம்மாதிரி நெற்கதிர் உண்டாவதற்கு நாம் என்னென்ன செய்ய வேண்டும்?



தகப்பனுர் :—இதற்குச் செய்யவேண்டிய காரியங்கள் பல உண்டு. அவை உழவு, பரம்படித்தல், நாற்று நடுதல், களை பிடுங்குதல், தண்ணீர் பாய்ச்சுதல் முதலியன.

மகன் :—உழவு என்ருல் என்ன, அப்பா ?

தகப்பனுர் :— கலப்பை அல்லது ஏர் என்று சொல்லப்படும் ஒரு கருவியால் வயலை உழுது புழுதியாக்கி, பயிர் வளரத் தக்கதாகச் செய்வதே உழவு. கலப்பைகளில் பல விதங்கள் உண்டு. மரத்திஞலே செய்து நுனியில் இரும்பிஞல் ஆகிய கொழு என்னும்

கருவியைச் சோத்து உபயோகிக்கிருர்கள். ஆனுல் இப்போது இரும்புக் கலப்பைகள் உபயோகிக்கப் பட்டு வருகின்றன. ‘ அகல உழுவதிலும் ஆழ உழு ’ என்றபடி இக் கலப்பையால் ஆழமாக உழவேண்டும்.

மகன் :—பரம்படித்தல் என்ருல் என்ன, அப்பா ?

தகப்பஞர் :—உழுத நிலத்தில் தண்ணீர் பாய்ச்சிப் புழுதியைச் சேருக்கவேண்டும். பிறகு மாடுகளைக் கொண்டு ஒரு பெரிய மரச்சட்டத்தை நிலத்தின்மீது இழுக்கவேண்டும். அப்பொழுது மண் கட்டிகள் உடைந்து கரையும். இதற்குத்தான் பரம்படித்தல் என்று பெயர். இப்படிப் பரம்படிப்பதால் வயல் நடக்கூடிய நிலைமை அடையும்.

மகன் :—நாற்று என்ருல் என்ன அப்பா ?

தகப்பஞர்:—வயலில் ஒரு சிறு பாகத்தில் நெல்லை நெருக்கமாக விதைத்துத் தண்ணீர் பாய்ச்சி ஏறக்குறைய ஒருச்சாண் உயரம் வரை வளரவிடுவார்கள். பிறகு அவைகளைப் பிடுங்கி வயல்களில் பரவலாக நடுவார்கள். இதுதான் நாற்று நடுதல் எனப்படும்.

மகன் :—இதன்பின் களை பிடுங்குவார்கள் என்றீர்களே, அது என்ன ?

தகப்பஞர் :—நெல் கதிர்களின் நடுவே கொஞ்ச நாட்களில் ஒருவகைப் புல்லும் வளரும். இவ்வகைப் புல், நெல் பயிர்களுக்கு வேண்டிய உணவைத் தின்று விடுமாகையால் அவைகளைப் பிடுங்கி எறிவார்கள். இதுதான் களை எடுப்பது எனப்படும். பிறகு வயல் நிறையத் தண்ணீர் பாய்ச்சுவார்கள். பலமுறை தண்ணீர் பாய்ச்சிய பிறகு, கதிர் தோன்றும். அவை நன்ருக முற்றிய பிறகு கதிர் அறுப்பும் நடக்கும். அதற்குத்தான் நாம் இப்பொழுது வந்திருக்கிருேம்.

மகன் :—அப்பா! இன்று வயலுக்கு வந்ததில் பல செய்திகளைத் தெரிந்துகொண்டேன்.

### புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| பாரம் | கதிர் | மட்டம் | அகல |
| கொழு | தாங்க | சாய்ந்து | பொன் |
| கருவி | பசுமை | சேருக்கி | கலப்பை |
| நாற்று | சாண் | பரவலாக | முற்றிய |
| பாகம் | ஆட்கள் | நெருக்கம் | எவ்வளவு |
| சட்டம் | அறுப்பு | அறுவடை | பரம்படித்தல் |
| இரும்பு | புழுதி | நிமிர்ந்து | ஏறக்குறைய |

### கேள்விகள்

1. கலப்பையைப் பற்றித் தெரிந்ததைக் கூறு.
2. பரம்படித்தல் என்றால் என்ன ?
3. களைபிடுங்குதல் எதற்கு ?

### பயிற்சி

(1) பின் வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைச் சேர்த்து எழுது :—

1. நெற்கதிர் முதலில்———நிறமாய் இருக்கும்.
2. கதிர் முற்றினல்———நிறமாக ஆகும்.
3. மரக் கலப்பையின் நுனியிலுள்ள இரும்பு———என்று சொல்லப்படும்.

(2) பின் வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களில் பொருத்தமான வினைச் சொற்களைச் சேர்த்துப் படி :—

1. வயலில் நாற்று நட்ட பிறகு களை———.
2. நெற்கதிர்கள் முற்றின பிறகு———.
3. சூரியன் பகலில்———.
4. சந்திரன் இரவில்———.

# 26. ஜஹாங்கீரின் நேர்மை

ஜஹாங்கீர் அக்பர் சக்கரவர்த்தியின் புதல்வர். அவர் நீதி தவருது செங்கோல் செலுத்திவந்தார். குடிகளின் குறைகளைக் கேட்டறிவதற்காக அவர் தமது அரண்மனையில் பெரிய மணி ஒன்றை அமைத்தார். அதன் கயிறு அரண்மனையில் வெளிப்புறக் கதவில் கட்டியிருந்தது. குடிகளில் எவருக்கேனும் துன்பம் நேர்ந்தால் அந்தக் கயிற்றை இழுத்து மணியை அடிப்பது வழக்கம். ஜஹாங்கீர் மணியின் ஒலியைக் கேட்டு மணியடித்தவரை அவைக்கு வரவழைத்து விசாரிப்பார்.

ஒரு நாள் ஓர் ஏழைப் பெண் அந்த மணியை அடித்தாள். ஜஹாங்கீர் மணி ஒலியைக் கேட்டதும் மணியடித்தவரை அழைத்து வரும்படி கட்டளையிட்டார். ஏழைப் பெண் அவர் எதிரில் வந்தாள். அவளை விசாரித்ததில், கோட்டையினுள்ளிருந்து வெளிவந்த ஒரு குண்டு பட்டு அவளுடைய கணவன் கொல்லப்பட்டதாகத் தெரிய வந்தது. உடனே ஜஹாங்கீர் துப்பாக்கி சுட்டவர் யாரெனக் கண்டுபிடிக்க உத்தரவிட்டார்.

ஜஹாங்கீரின் பட்டத்து ராணியான நூர்ஜஹான் துப்பாக்கி சுட்டதாகச் செய்தி கிடைத்தது. அவையில் கூடியிருந்தவர்கள் ஜஹாங்கீர் அளிக்கப் போகும் தீர்ப்பை ஆவலுடன் எதிர்பார்த்தார்கள். உடனே ஜஹாங்கீர் ஒரு துப்பாக்கியை அந்த ஏழைப் பெண்ணிடம் கொடுத்து, "நமது நீதியின் படி, கொலைக்குப் பதில் கொலைதான். என் மனைவி உன் கணவனைக் கொன்று உன்னைக் கைம்பெண்

ணுக்கினுள். ஆகவே நீயும் என்னைக் கொன்று அவளைக் கைம்பெண்ணுக்கு," என்ருர்.

சபையோர் மிக்க வியப்படைந்தனர். அந்த ஏழைப் பெண், "நான் இவ்விதம் பழிவாங்க விரும்ப வில்லை. நான் தங்களது மனைவியை மன்னித்துவிட் டேன்," என்று கூறினுள். ஜஹாங்கீரும் அவளைப் பாராட்டி நூர்ஜஹானுக்குக் கொடுத்திருந்த கிராமங் களில் பாதியை அவளுக்கு ஜாகீராகக் கொடுத்தார். ஜஹாங்கீரின் நேர்மையைக் குடிகள் எல்லோரும் புகழ்ந்தார்கள்.

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| ராணி | ஒலி | விசாரி | குண்டு |
| ஏழை | தீர்ப்பு | மனைவி | கட்டளை |
| ஜாகீர் | பாராட்டி | கொல்ல | கணவன் |
| நேர்மை | பழிவாங்கு | துப்பாக்கி | குறைகள் |
| சுட்டவர் | அமைத்தார் | கைம்பெண் | |

கேள்விகள்

1. ஜஹாங்கீரின் அரண்மனையில் பெரிய மணி எதற்காக அமைக்கப்பட்டிருந்தது?
2. அரண்மனை மணியை ஏழைப் பெண் ஏன் அடித்தாள்?
3. ஜஹாங்கீர் எப்படி நியாயம் வழங்கினுர்?

பயிற்சி

(1) பின் வரும் சொற்களுக்கு எதிர்ச் சொற்களை எழுது:—
வெளிப்புறம்; முன்னே; புகழ்ந்தார்கள்; நியாயம்.

(2) தக்க இடத்தில் முற்றுப் புள்ளியும் காற்புள்ளியும் அமை:—
ஜஹாங்கீர் அக்பரின் புதல்வர் ஆவர் அவர் நீதி தவருமல் ஆட்சி செய்து வந்தார் மக்களுக்கு நீதி வழங்க எண்ணி அவர் தம் அரண்மனையில் ஒரு மணி கட்டினுர்

# 27. படப் பயிற்சி—II

## நாயின் நல்லறிவு

பின் வரும் படங்களை வரிசையாகப் பார்த்து ஒவ்வொரு படத்தைப் பற்றியும் ஒரு வாக்கியம் எழுது. பிறகு அவற்றைச் சேர்த்துக் கதையாகச் சொல்லு.



# 28. உலகப் போக்கு

உலகப் போக்கைப் பாருங்கள்,
ஊரைக் காக்கச் சேருங்கள்;
கலகப்பேய் புகுந்திடும்
கவலையே மிகுந்திடும். (உலக)

அடிமை வாழ்வு விட்டுநாம்
ஆண்மை வாழ்வு கிட்டினேம்;
கடமை யோடு எல்லையைக்
காக்க வேண்டும் அல்லவோ ? (உலக)

நாடு முற்றும் நம்மது
நன்மை தீமை நம்மது;
வீடு பெண்டு மக்களை
வேறு காக்கத் திக்கு யார் ? (உலக)

படை யெடுக்கும் யாரையும்
பயமுறுத்து வோரையும்
நடு நடுங்கச் செய்குவோம்;
நாட்டை மீட்டு உய்குவோம். (உலக)

சாந்த வாழ்வை மிஞ்சிடோம்
சாவதற்கும் அஞ்சிடோம்;
மாந்தருக்குள் பீதியை
மாற்ற வேண்டும் நீதியால். (உலக)

--நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம் பிள்ளை

புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| பீதி | பேய் | மீட்டு | காக்க |
| தீமை | சாந்த | கடமை | கவலை |
| எல்லை | கலகம் | மிஞ்சி | நடுங்க |
| அடிமை | சாவதற்கு | பெண்டு | போக்கு |
| ஆண்மை | உய்குவோம் | பயமுறுத்து | மிகுந்திடும் |

கேள்விகள்

1. உலக நிலைமை எப்படி இருக்கிறதென்று கவிஞர் கூறுகிறார்?
2. நமது முக்கியமான கடமை என்ன?
3. நம்மைப் பயமுறுத்துவோரையும் நம்மீது படையெடுப்போரையும் நாம் என்ன செய்யவேண்டும்?
4. உலக மக்களிடையே எழுந்துள்ள யுத்த பீதியை எவ்வாறு குறைக்க வேண்டும்?
5. இப்பொழுதுள்ள உலக நிலைமையைப்பற்றியும் நமது கடமையைப் பற்றியும் ஐந்து வாக்கியங்கள் எழுது.

## 29. அடக்கம் பெருமை தரும்

ஈசுவரசந்திரர் வங்காளத்தில் பிறந்தவர். இளமையிலேயே அவர் மிகவும் கெட்டிக்காரராக இருந்தார். அவர் கல்கத்தாவிலுள்ள ஒரு கல்லூரியில் சம்ஸ்கிருதம் கற்றுப் பெரும் புலவரானார். அவருடைய தகுதியை அறிந்து அரசாங்கத்தார் அவருக்கு 'வித்யாசாகரர்' (கல்விக் கடல்) என்னும் பட்டம் அளித்தார்கள்.

கல்லூரிப் படிப்பு முடிந்ததும் அவருக்கு அரசாங்க வேலை கிடைத்தது. நாளடைவில் அவர் சம்ஸ்கிருதக் கல்லூரியின் தலைமை ஆசிரியர் ஆனார். அதன் பிறகு அவர் வங்காளத்திலிருந்த சம்ஸ்கிருத பாடசாலைகளையும் கல்லூரிகளையும் மேற்பார்க்கும் அதிகாரியாக நியமிக்கப்பட்டார். அவர் வங்காளி மொழியிலும் சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தார்.

ஈசுவரசந்திரர் அடக்கமான இயல்பு பொருந்தியவர். எப்பொழுதும் ஏழை எளியாருக்குத் தம்மால் இயன்ற அளவு உதவி செய்து வந்தார். அவர் நூற்றுக் கணக்கான ஏழை மாணவர்களுக்கு உதவி

செய்தார். அவர் இவ்வளவு பெரிய மனிதராக இருந்தும், எப்பொழுதும் சாதாரணமான உடையே அணிந்து வந்தார். ரயில் வண்டியில் அவர் மூன்றும் வகுப்பிலேயே பிரயாணம் செய்து வந்தார்.

ஒரு தடவை வித்தியாசாகரர், கல்கத்தாவிலிருந்து பர்த்வானுக்குச் சென்று கொண்டிருந்தார். அதே வண்டியில் ஒரு நாகரிக இளைஞன் ஐரோப்பிய




உடை அணிந்து உட்கார்ந்திருந்தான். அவனும் பர்த்வானுக்குச் சென்று கொண்டிருந்தான். ரயில் வண்டி பர்த்வான் நிலயத்தில் வந்து நின்றது. இளைஞன் தன்னுடைய சிறு கைப்பெட்டியைத் தூக்கி வருவதற்காகக் கூலியாளைக் கூவியழைத்தான். அச்சமயம் அங்கே கூலியாள் யாரும் இல்லை. இளைஞன் மிக்க கலவரமடைந்தான். இதைக் கண்ட வித்தியாசாகரர் அவனிடம் சென்று, "இங்கே கூலியாள் யாரும் இல்லை. உங்களுக்கு விருப்பமானல்,

நானே பெட்டியைத் தூக்கிவருகிறேன்," என்ருர். இளைஞன் கர்வத்துடன் அதற்கு இசைந்தான். வித்தியாசாகரர் பெட்டியைத் தூக்கிக்கொண்டு இளைஞனுக்கு முன்னுல் சென்ருர். வீட்டை அடைந்த பின் இளைஞன் இரண்டணுவை எடுத்து வித்தியாசாகரருக்குக் கொடுக்க முன்வந்தான். வித்தியாசாகரர் வணக்கத்துடன் அதனைப் பெற்றுக்கொள்ள மறுத்துத் தம் வழியே சென்ருர்.

அடுத்த நாள் அந்த ஊரில் பண்டித ஈசுவர சந்திர வித்தியாசாகரரை வரவேற்கப் பெருங்கூட்டம் கூடியது. வித்தியாசாகரரின் புகழைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த அந்த இளைஞனும் அந்தக் கூட்டத்திற்குச் சென்ருன். அப்பெருங் கூட்டத்தின் நடுவே எளிய உடையணிந்த ஒரு மனிதர் நிற்பதை அவன் கண்டான். மக்கள் அவரை வரவேற்று மரியாதை செய்தனர். இளைஞன் அவர் அருகில் சென்று அவரைக் கண்டான். முதல்நாள் தனது பெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்த மனிதரே புகழ் பெற்ற ஈசுவரசந்திர வித்தியாசாகரர் என்பதைத் தெரிந்து கொண்டதும் அவன் திடுக்கிட்டான். தான் அவரிடம் கர்வத்துடன் நடந்துகொண்டதை எண்ணி வருந்தினுன். கூட்டம் முடிவுற்றதும் அவன் வித்தியாசாகரரிடம் சென்று தனது பிழையைப் பொறுக்க வேண்டுமெனச் சொல்லிக் கொண்டு அவரது கால்களில் விழுந்து வணங்கினுன். அவர் அவனை மன்னித்து நற்புத்தி கூறி அனுப்பினுர்.

புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| தகுதி | இளமை | திடுக்கிடு | நியமி | எளியார் |
| பிழை | மேற்பார் | சம்ஸ்கிருதம் | கலவரம் | மாணவர் |
| அடக்கம் | இளைஞன் | சாதாரண | மரியாதை | பெருமை |

### கேள்விகள்

1. ஈசுவரசந்திரருக்கு என்ன பட்டப் பெயர், எப்படிக் கிடைத்தது ?
2. வித்தியாசாகரர் என்ன வேலை பார்த்தார் ?
3. வித்தியாசாகரரின் குணங்களைப்பற்றி மூன்று வாக்கியங்கள் எழுது.
4. இளைஞன் தனது பெட்டியைத் தூக்க ஆள் கிடைக்காததால் என்ன செய்தான் ? வித்தியாசாகரர் அவனுக்கு எப்படி உதவினர் ?
5. இளைஞன் மறுநாள் கூட்டத்தில் என்ன கண்டான் ?
6. இளைஞன் தன் குற்றத்தைத் தெரிந்து கொண்டதும் என்ன செய்தான் ?

### பயிற்சி

(1) பின்வரும் பெயர்ச் சொற்களை 1. பொருள்களின் பெயர், 2. இடங்களின் பெயர், 3. காலங்களின் பெயர் என்று வகைப் படுத்தி எழுது:—

மரம், வங்காளம், யானை, மாதம், மதுரை, பையன், நாள், பூனை, மல்லிகை, நிமிடம்.

(2) பின் வரும் வாக்கியங்களில் பெயர்ச் சொற்களுக்குப் பொருத்தமான வினைச் சொற்களை அமைத்து எழுது:—

1. வித்தியாசாகரர் பெட்டியைத்——. (தூக்கு)
2. இளைஞன் தனது குற்றத்தை——. (உணர்)
3. ஊர் மக்கள் வித்தியாசாகரருக்கு மரியாதை——. (செய்)

# 30. ஹென்றி போர்டு

ஹென்றி போர்டு அமெரிக்கா நாட்டில் பிறந்தவர். விடாமுயற்சியுடன் உழைத்து உலகிலேயே மிகப் பெரிய மோட்டார் தொழிற்சாலையை அமைத்தார். அந்தத் தொழிற்சாலை இன்றும் இருக்கிறது. அதில் ஆண்டுதோறும் பல நூறுயிரக் கணக்கான மோட்டார் வண்டிகளைத் தயாரித்து விற்கிறார்கள்.

ஹென்றி போர்டின் செல்வம் அளவிடமுடியாததாயிருந்தது. எனினும் அவர் மிகவும் சிக்கனமாகவே வாழ்ந்து வந்தார். அவருக்கு எண்பத்தொன்றும் வயது நடந்தபொழுது, தொழிற்சாலை நிர்வாகத்தைத் தம் பேரரிடம் ஒப்படைத்து விட்டு ஓய்வெடுத்துக் கொண்டார்.



அப்பொழுது அவர் ஒரு நாள் தம் கொள்ளுப் பேரனின் கையைப் பிடித்துக் கொண்டு தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தார். அந்தச் சிறுவன் தன்னிடமிருந்த ஒரு செப்புக் காசை அற்பமெனக் கருதி, எறிந்தான். அதைக் கண்ட போர்டு, குனிந்து புல் தரையில் தேடிப் பார்த்து அந்தக் காசைக் கண்டு பிடித்தார். அதை எடுத்துக் கொள்ளுப் பேரனிடம் கொடுத்தார்.

சிறுவனுன கொள்ளுப்பேரன் மிகவும் வியப்படைந்தான். அவன், "தாத்தா! உலகிலேயே

நீங்கள்தான் மிகப் பெருஞ் செல்வமுடையவர் என்று சொல்கிருர்கள். அப்படியிருந்தும், இந்த அற்பக் காசை ஏன் தேடி எடுத்தீர்கள்?'' என்று கேட்டான்.

ஹென்றி போர்டு, "செப்புக் காசு என்று அற்பமாக எண்ணக்கூடாது. இது ஓர் உலோகம். இதற்குச் சுயமதிப்பு உண்டு. நாம் திடீரென யாருமில்லாத தீவில் விடப்படலாம். அப்பொழுது கையில் செப்புக் காசு இருந்தால், அதைப் பல வழிகளில் பயன்படுத்திக் கொள்ளலாம். அதைக் கூராகச் செய்து கத்தியாக்கி உபயோகிக்கலாம். ஆனல் காகிதப் பணம் எவ்வளவு இருந்தாலும் அது பயன்படாது,'' என்று கூறினர்.

செப்புக் காசுதான் என்ருலும், அதன் உண்மை மதிப்பை ஹென்றி போர்டு அறிந்திருந்தார். பொருள்களை வீணக்குவது என்பதை அவரிடம் சிறிதும் காண முடியாது.

### புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| செப்பு | சிக்கனம் | தீவு | காசு |
| சுயமதிப்பு | பணம் | வீணக்கு | கத்தி |
| செல்வம் | கொள்ளுப்பேரன் | கூராக | நிர்வாகம் |

### கேள்விகள்

1. ஹென்றி போர்டு அமைத்த தொழிற்சாலையில் என்ன உற்பத்தி செய்கிருர்கள்?
2. ஹென்றி போர்டு எப்பொழுது ஓய்வெடுத்துக் கொண்டார்?
3. போர்டின் கொள்ளுப்பேரன் செப்புக்காசை ஏன் கீழே எறிந்தான்? அப்பொழுது போர்டு என்ன செய்தார்?
4. செப்புக் காசு எவ்வாறு பயன்படும் என்று போர்டு தம் கொள்ளுப்பேரனுக்குக் கூறினர்?

பயிற்சி

(1) அடைப்புக் குறிகளிலுள்ள வினைச் சொற்களைச் சரியானபடி மாற்றி, கோடிட்ட இடங்களில் அமைத்துப் படி :—

1. நாங்கள் நேற்று———. (போ)
2. பையன் இன்று நன்ருகப்———. (பேசு)
3. சில காட்டு மிருகங்களைக் கண்டால் நாம்———. (பயப்படு)
4. பசு பால்———. (தா)

(2) ஒருமையைப் பன்மையாகவும் பன்மையை ஒருமையாகவும் மாற்றி எழுது :—

1. நாய்கள் குரைக்கின்றன.
2. நேற்று நான் உன்னுடன் சென்றேன்.
3. மாணவர்களே! ஓடி விளையாடுங்கள்.

(3) தக்க இடத்தில் முற்றுப் புள்ளிகளை அமைத்து எழுது :—

போர்டின் செல்வம் அளவிடமுடியாததாயிருந்தது எனினும் அவர் சிக்கனமாகவே வாழ்ந்து வந்தார் அவர் தம் எண்பத்தொன்ரும் வயதில் ஓய்வெடுத்துக் கொண்டார்

# 31. பையனும் பிரபுவும்

ஒரு பிரபு தம் ஊருக்கு அருகில் உள்ள சந்தையில் ஒரு காளைமாடு வாங்கினர். அந்த மாட்டை நம்பிக்கையுள்ள ஒரு பையன் வசம் அனுப்பும்படி அதை விற்றவனிடம் சொல்லிவிட்டு வந்து விட்டார். அவ்வாறே மாட்டை விற்றவன் அதை அனுப்பினன்.

அதை ஓட்டிக் கொண்டு வந்த பையன் வயதில் மிகவும் சிறியவன். மாடு முரட்டு மாடாய் இருந்தது. அது இங்கும் அங்கும் இழுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தது. சிறுவன் தன்னல் இயன்ற அளவு மாட்டை அடக்கிப் பார்த்தான். அவனுல் முடியவில்லை. அவன் துன்பப்படுவதைச் சாதாரண உடையோடு அவ்வழியே வந்த ஒருவர் பார்த்தார்.

சிறுவன், "ஐயா! தயவு செய்து எனக்குச் சிறிது உதவி செய்யுங்கள். இது எனக்கு அடங்க வில்லை. நீங்கள் இதைச் சிறிது பிடித்துக் கொண்டு வந்தால் எனக்குக் கிடைக்கும் கூலியில் பங்கு கொடுப்பேன்," என்றான். அதற்கு அவர், "உன் கூலியில் சரிபாதி கொடுப்பதாயிருந்தால், நான் உதவி செய்கிறேன்," என்றார். சிறுவன் அதற்கு இசைந்தான். அவரும் மாட்டைப் பிடித்துக்கொண்டு வந்தார்.



பிரபுவின் வீட்டருகில் வந்ததும், உதவியாக வந்தவர், "நான் இங்கேயே இருக்கிறேன். அவர்கள் கொடுக்கும் கூலியை நீ வாங்கி வந்து என் பங்கைக் கொடுத்தால் பெற்றுக் கொள்ளுகிறேன்," என்று சொல்லிப் பின்னே தங்கிவிட்டார்.

சிறுவன் உள்ளே நுழைந்ததும், அவர் வேறு வழியாய் அந்த வீட்டிற்குள் புகுந்து, ஓர் ஊழிய

னிடம் ஐந்து ரூபாய் கொடுத்து, "இதை அந்த மாடு ஓட்டி வரும் பையனுக்குக் கொடு," என்று சொல்லி விட்டு வெளியே வந்துவிட்டார். அவர்தான் அந்த வீட்டின் பிரபு என்று பையனுக்குத் தெரியாது.

சிறுவன் மகிழ்ச்சியுடன் வெளியே வந்து, பிரபுவைப் பார்த்து, "ஐயா! எனக்கு ஒரு ரூபாய் கூலி கொடுத்தார்கள். நான் சொல்லியபடி அரை ரூபாய் நீர் பெற்றுக்கொள்ளும்," என்று கொடுக்க வந்தான். அவர், "அப்பா! இந்த வீட்டில் இதைவிட அதிகம் கூலி கொடுப்பார்களே! ஏன் இப்படிக் கொடுத்தார்கள்? எதற்கும் உள்ளே போய்க் கேட்போம் வா," என்று கூறி, அவனை உள்ளே கூட்டிச் சென்றார். உள்ளே புகுந்ததும் பிரபு, ஒரு பெரிய அறையிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு மேசையின் மேல் வைத்திருந்த மணியை அடித்தார்.

உடனே பல ஊழியர்கள் வேகமாய் வந்தார்கள். பிரபு சிறுவனைப் பார்த்து, "அப்பா! இவர்களில் உனக்கு ஒரு ரூபாய் கொடுத்தவன் யார்?" என்று கேட்டார்.

சிறுவன் தனக்கு ஒரு ரூபாய் கொடுத்தவனைக் காட்டினன். அந்த ஊழியன் பிரபுவைப் பார்த்து, "ஐயா! நான் செய்தது பெரிய குற்றமே. சிறுவனுக்கு ஒரு ரூபாய் கொடுத்து நான் நான்கு ரூபாய் எடுத்துக் கொண்டேன். அறிவில்லாமல் செய்த பிழையைப் பொறுத்துக் கொண்டு என்னைக் காப்பாற்ற வேண்டும்," என்று சொல்லிக் காலில் விழுந்தான். பிரபு சிறுவன் உண்மை பேசியதற்கும் சொன்ன சொல்லைக் காப்பாற்றியதற்கும் மகிழ்ந்து,

அவனுக்குப் பத்து ரூபாய் கொடுத்தனுப்பினர். ஊழியனை வேலையிலிருந்து நீக்கிவிட்டார்.

## உண்மையே உயர்வு அளிக்கும்

புதுச்சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| பிரபு | வசம் | பங்கு | ஊழியன் | ரூபாய் |
| ஓட்டி | தயவு | இயன்ற | அவ்வாறு | நம்பிக்கை |
| உயர்வு | முரட்டு | சந்தை | சரிபாதி | துன்பப்படு |

கேள்விகள்

1. பையன் மாட்டைக் கொண்டுவர என்ன செய்தான்?
2. ஊழியனது திருட்டைக் கண்டுபிடிக்க, பிரபு என்ன செய்தார்?

பயிற்சி

(1) எதிரான பொருளுடைய சொற்களை எழுது :—
மேல்; உண்மை; பெரிய; தெரியாது; வேண்டும்; உயர்வு.

(2) பின் வரும் வாக்கியங்களில் எவை வினைச் சொற்கள்?
1. இது எனக்கு அடங்கவில்லை.
2. நான் இங்கேயே இருக்கிறேன்.
3. பிரபு வீட்டினுள் நுழைந்தார்.
4. சிறுவன் பிரபுவைப் பார்த்துப் பேசினன்.

(3) மேலே காட்டிய வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களின் காலங்களைக் குறிப்பிடு.

# 32. பழங்களைப் புசி

"பழங்களைப் புசி" என்றால் யார்தான் புசிக்க மாட்டார்கள்! எல்லோருக்கும் பழங்களைச் சாப்பிட விருப்பம் தான். வாழை, மா, பலா, ஆரஞ்சு, ஆப்பிள் முதலிய பழங்கள் எவ்வளவு இனிமையாயிருக்கின்றன! அடுக்கி வைத்தால் எவ்வளவு அழகாயிருக்கின்றன!

பழங்களைச் சமைக்காமலேயே சாப்பிடலாம். அவை இனிமையாயிருப்பதுடன், உடலுக்கும் நலம்

தரும். நம் உடல் நன்னிலையில் இருப்பதற்கு வேண்டிய சில சத்துக்கள் பழங்களில் இருக்கின்றன. நாள் தோறும் பழங்களைச் சாப்பிட்டு வந்தால் நோயே நம்மை நெருங்காது.

ஆனால் எல்லாரும் பழங்களைத் தினந்தோறும் சாப்பிடுவதில்லை. இதற்குக் காரணமென்ன? பழங்



களைப் பொதுவாக அதிக விலை கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது. பழங்களில் மலிவானது வாழைப் பழம் என்று சொல்லலாம். வாழைப் பழத்திலும் நல்ல உணவுச் சத்துக்கள் உண்டு. ஆகையால் ஒவ்வொருவரும் நாள்தோறும் ஒரு வாழைப் பழத்தையாவது வாங்கிச் சாப்பிடுவது நல்லது.

நமது முன்னோர் மூன்று பழங்களை மிகச் சிறந்தவையாகக் கருதினார்கள். அவை முக்கனி அல்லது முப்பழம் என்று பெயர் பெற்றன. அவை எந்தப் பழங்கள் என்று தெரியுமா? வாழை, மா, பலா என்பவையே முக்கனிகளாகும்.

ஆப்பிள் என்ற பழம் நம் நாட்டிற்குப் புதிது. இது உடலுக்கு மிகவும் நலம் தரும் பழம். "நாள்

தோறும் ஒரு ஆப்பிள் சாப்பிட்டால் வைத்தியரிடம் போகவேண்டாம்,'' என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு.

வாழை, ஆப்பிள், ஆரஞ்சு ஆகிய பழங்களை அதிகமாகச் சாப்பிட்டால் கெடுதி ஒன்றும் இல்லை. அதனால் உடம்புக்கு நன்மையே உண்டாகும். ஆனால் மா, பலா போன்ற சில பழங்களை மிதமாகப் புசிக்க வேண்டும்.

மாதுளை, கொய்யா, அன்னாசி, திராட்சை முதலிய வேறு பல பழங்களும் இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதமான இனிய சுவையோடு இருக்கும். இவற்றையும் மிதமாகவே புசிக்க வேண்டும்.

திராட்சை, பேரீச்சை, அத்தி, போன்ற சில பழங்களைப் பக்குவப்படுத்தி நெடுங்காலம் கெடாமல் வைத்திருக்கிறார்கள். இவையும் நம் உடல் நலத்திற்கு ஏற்றவை.

புளிப்பான பழங்களில் எலுமிச்சையும் புளியும் முக்கியமானவை. நம் சாப்பாட்டிற்கு இவை புளிப்புச் சுவை தரப் பயன்படுகின்றன. எலுமிச்சம் பழச்சாறு உடம்புக்கு நல்லது.

பெரியோர்களையும் குழந்தைகளையும் பார்க்கப் போகும்பொழுதும் கோவிலுக்குப் போகும்பொழுதும் பழங்களை வாங்கிக்கொண்டு போகிறோம். உணவுப் பொருள்களில் பழங்களே சிறந்தவை என்பதை இது காட்டுகிறது.

### புதுச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| சாறு | ஆப்பிள் | சத்து | பேரீச்சை |
| முக்கனி | பயன்படு | நன்னிலே | புளிப்பான |
| இனிமை | அளவுமீறி | வைத்தியர் | எலுமிச்சை |
| ஆரஞ்சு | கெடுதி | கொய்யா | நெடுங்காலம் |
| அத்தி | மாதுளே | பக்குவ | தினந்தோறும் |

### கேள்விகள்

1. பழங்களேச் சாப்பிடுவது ஏன் நல்லது ?
2. முக்கனி என்பது எந்தப் பழங்களேக் குறிக்கும் ?
3. மேல் நாட்டினர் மிகச் சிறந்த பழமாக எதைக் கூறுகின்றனர் ?
4. உலர்த்திப் பக்குவம் செய்யப்படும் பழங்கள் எவை ?
5. புளிப்பான பழங்களில் முக்கியமானவை யாவை ?

### பயிற்சி

(1) கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களேச் சேர்த்துப் படி :—

1. வாழைப்பழமும்———. (விலேயதிகம், விலே குறைவு)
2. பலாப்பழத்தை———புசிக்கலாம். (அதிகமாக, மிதமாக)

(2) முதல் பத்தியிலுள்ள ஒவ்வொரு பழத்தையும், இரண்டாம் பத்தியிலுள்ள சுவையுடன் பொருத்தமாகச் சேர்த்துப் படி:—

| | |
|---|---|
| ஆப்பிள் பழம் | கசக்கும் |
| எலுமிச்சம் பழம் | இனிக்கும் |
| மிளகாய்ப் பழம் | புளிக்கும் |
| பாகல் பழம் | உறைக்கும் |

# 33. மரமும், மாடும்

'மரமே, மாடே' என்றெல்லாம்
மனிதர் திட்டிக் கொள்கின்றார்.
மரமும் மாடும் உதவுதல்போல்
மனிதர் எங்கே உதவுகிறார் ?
நிழலைத் தந்து களைப்பெல்லாம்
நீக்குதல் அந்த மரமாகும்.
பழத்தைத் தந்து உடலுக்கே
பலத்தைத் தருவது மரமாகும்.
விறகைத் தந்து அரிசியினை
வேகச் செய்வது மரமாகும்.
பறவை கூடு கட்டி இனம்
பரவச் செய்வது மரமாகும்.
வயலை உழுது பயிர்களையே
வளரச் செய்வது மாடாகும்.
வெயிலில், மழையில் வண்டிகளை
விரைந்து இழுப்பது மாடாகும்.
கழுத்து நோகத் தினந்தினமும்
கவலை இழுப்பது மாடாகும்.
கொளுத்தும் வெயிலில் நடந்திடவே
கொடுப்பது மிதியடி, மாடாகும்.

—அழ. வள்ளியப்பா.

புதுச்சொற்கள்

| | | |
|---|---|---|
| திட்டிக்கொள் | இனம்பரவ | கவலை |
| களைப்பு | விரைந்து | கொளுத்தும் |
| வேகச்செய் | நோக | மிதியடி |

கேள்விகள்

1. மரம் நமக்கு எப்படிப் பயன்படுகிறது ?
2. பறவைகளுக்கு மரம் எவ்வாறு உதவுகிறது ?
3. மாடுகள் நமக்கு என்ன வழிகளில் உதவி செய்கின்றன?

# 34. புத்தகசாலை

தமிழர்க்குத் தமிழ்மொழியிற் சுவடிச்சாலை
சர்வகலா சாலையைப்போல் எங்கும் வேண்டும்.
தமிழிலிலாப் பிறமொழி நூல் அனைத்தும் நல்ல
தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும்.
அமுதம்போல் செந்தமிழிற் கவிதை நூல்கள்,
அழகியவாம் உரைநடையில் அமைந்த நூல்கள்,
சுமை சுமையாய்ச் சேகரித்துப் பல்கலைசேர்
துறை துறையாய்ப் பிரித்தடுக்கி வைத்தல்வேண்டும்.

—பாரதிதாசன்

புதுச்சொற்கள்

| | | |
|---|---|---|
| சுவடிச்சாலை | அமுதம் | உரைநடை |
| சர்வகலாசாலை | செந்தமிழ் | சேகரித்து |
| அனைத்தும் | கவிதை | துறை |

கேள்விகள்

1. சுவடிச்சாலை என்றால் என்ன ?
2. தமிழில் இல்லாத பிறமொழி நூல்களை யாது செய்தல் வேண்டும் ?
3. சுவடிச் சாலையில் நூல்களை எப்படிப் பிரித்து அடுக்க வேண்டும் ?

# 35. வெற்றிவேற்கை

1. பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர்
சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லர்.

2. ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.

3. நூருண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.

4. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே.

5. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்ருேரை வருக வென்பர்.

6. குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினு நண்ணுவர்.

7. குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினு மழிவர்.

8. எழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாகினு மாகும்.

9. தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே.

10. குன்றுடை நெடுங்கா டூடே வாழினும்
புன்றலைப் புல்வாய் புலிக்கஞ் சும்மே.

11. ஆரையாம் பள்ளத் தூடே வாழினும்
தேரை பாம்பிற்கு மிகவஞ் சும்மே.

12. கொடுங்கோன் மன்னர் வாழு நாட்டில்
கடும்புலி வாழும் காடு நன்றே.

13. தன்னு யுதமும் தன்கையிற் பொருளும்
பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே.

14. பொய்யுடையொருவன் சொல்வன் மையினல்
மெய்போ லும்மே மெய்போ லும்மே.

15. மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.

# 36. வாக்குண்டாம்

1. நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்.

2. நல்லா ரொருவர்க்குச் செய்த வுபகாரங்
கல்மேல் எழுத்துப்போற் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர்.

3. அட்டாலும் பால்சுவையிற் குன்று தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

4. அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தா னீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா.

5. உற்ற விடத்தி லுயிர்வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கிற்
றளர்ந்து வளையுமோ தான்.

6. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று.

7. தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது.

8. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாந்—தொல்லுலகில்
நல்லா ரொருவ ருளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை.

9. மடல் பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்.

10. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம்.

11. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

12. வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மே லிட்ட கலம்.

13. அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீ னோட வுறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு.

14. அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்திற்
கொட்டியு மாம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு.

15. உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரு முண்டு.



